ஜப்பானிய யுத்தக் குற்றவாளிகளைப்பற்றிய விசாரணையில் பிரிட்டிஷ் சர்க்காரின் ப்ராசிக்யூடர் கோமின் கார் கே.ஸி.



அணுகுண்டு பற்றிய ரஸமான விவாதம் ஒன்றில் சிந்தை பறிகொடுத்திருக்கும் சிறுவன்.




சமீபத்தில் மலேயாவின் ராஜ்ப்ரதிநிதியாக நியமனம் பெற்றிருக்கும் திரு. மால்காம் மாக்டோனல்ட்



# மீன்கள் அதிகம் உற்பத்தியாகக் கடலுக்கு உரம் போடும் முறை

விளைபொருள்களின் தன்மையையும் அளவையும் அதிகரிக்க பூசாரத்தை வளப்படுத்துவதற்கு உரமிடும் முறையில் எத்தனையோ முறைகள் கையாளப்படுகின்றன. இயற்கையாக வண்டல் படிந்த நிலங்கள், தழை, குப்பை, எலும்பு, பிண்ணாக்கு, செயற்கை எரு இப்படி பல ரகங்கள் நிலத்திற்கு உரமிடும் முறையில் இருப்பது உங்களுக்குத் தெரியும்.

இதைப்போல மீன்கள் உற்பத்தியாகும் கடல் தண்ணீருக்கு உரமிட்டால் அதிக மீன்கள் உற்பத்தியாகுமா? ஆகாயத்தில் பறந்து திரியும் பக்ஷி ஜாலங்களை அதிகமாக உற்பத்தி செய்ய ஆகாயப் பரப்பில் உரத்தைக் கலந்து விடலாமா?

பக்ஷி ஜாலங்களின் விஷயம் ஒரு புறம் இருக்கட்டும். நீர்வாழும் பிராணி வர்க்கத்தை அதிகமாக உற்பத்திசெய்ய கடல் நீருக்கு உரம் போட வேண்டுமென்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்து அம்முயற்சியில் முன்னேறியும் இருக்கிறார்கள். உங்களுக்கு அதிசயமாகத் தோன்றலாம். ஆனால் முற்றிலும் உண்மை. அரிய பலன்கள் இந்த முயற்சியில் கிடைத்திருப்பதான தகவல்களை ஈவனிங் ஸ்டாண்டர்ட் விஞ்ஞான நிருபர் தருகிறார்.

“இப்பரிசோதனைகள் ஸ்காட்லாந்து தேசத்தின் மேற்குக் கடற்கரையில் க்ரெய்க்களின் ஏரியில் நடந்து வந்தன. ‘பெரிய மீன்களுக்குச் சிறிய மீன்கள் இரை; சிறிய மீன்களுக்குப் பொடி மீன்கள் இரை; எல்லாவற்றையும்விட சிறிய மீன்களுக்கு ‘பிட்டோப்ளாங்டன்” ஜீவ அணுக்கள் இரை என்கின்ற உண்மை தெரிய வந்ததே இவ்வாராய்ச்சிக்கு ஆதி காரணம். இந்த ஜீவ அணுப்பிறவியின் வளர்ச்சி பொட்டாசியம், நைட்ரஜன், பாஸ்பரஸ் ஆகிய ரசாயனப் பொருள்களால் உத்வேகமடைகிறது. பொட்டாசிய உப்பு ஏற்கனவே கடலில் ஏராளமாயிருக்கிறது. எனவே, பிட்டோப்ளாங்டன் உற்பத்தியைப் பெருக்குவதற்கு மற்ற இரண்டு பொருள்களைக்கடலில் கரைத்தால்போதும்.

எடின்பரோ சர்வகலாசாலையைச் சேர்ந்த டாக்டர் க்ராஸ், மில்போர்ட் பட்டிணத்திற்கு ஜீவப் பொருள் ஆராய்ச்சி நிலையத்திலிருந்தும் இம்பீரியல் கெமிக்கல்இன்டஸ்ட்ரீஸ் ஸ்தாபனத்திலிருந்தும் ஒரு கோஷ்டியை க்ரெய்க்களின் ஏரிக்குக் கொண்டு சென்றார். அந்த ஏரிக்கு ஒரு வாய்க்கால் மூலம் கடலோடு தொடர்பிருப்பதாலும் அந்த வாய்க்கால் நீரை அணைபோட்டுத் தடுத்து ஸ்வின் ஏரிக்குள் திருப்பிவிட முடியுமாதலாலுந்தான் அந்த ஏரி தேர்ந்தெடுக்கப்பட்டது. க்ரெய்க்ளின்ஏரியிலும் ஸ்வின் ஏரியிலும் பிளௌண்டர் என்னும் ஒரே ஜாதி மீன்கள் ஒரே அளவாக விடப்பட்டன. 1942 மார்ச்முதற்கொண்டு கிரெய்க்ளின் ஏரியில் சோடிய நைட்ரேட் உப்பும் ஸூப்பர்பாஸ்பேட் உப்பும்

இரண்டு வருஷத்தில், அவ்வேரியில் விட்டமீன்கள், ஸ்வின் ஏரியில் பெருகியதைப்போல் இரண்டத்தனையாக விருத்தியாய் விட்டன. 16 தானிய எடை கொண்ட ஒரு பிளௌண்டர் இந்த 2 வருஷகாலத்தில் ஸ்வின் ஏரியில் 160 தானிய எடை அளவுக்குத்தான் பெருத்திருந்தது; ஆனால், கிரெய்க்ளின் ஏரியிலோ அது 4,000 தானிய எடை அளவுக்கு அதாவது ஸ்வின் ஏரியில் பெருத்திருந்ததைப்போல் 25 மடங்கு பருத்திருந்தது. சாதாரணமாய் ஆறுவருஷத்தில் விற்பனைக்கு தயாராகும் ப்ளௌண்டர் மீன்கள் இப்படி உரம் போட்ட தண்ணீரில் மூன்றே வருஷத்தில் விற்பனைக்கு தயாராகிவிடும்.

இப்பரிசோதனைகள் இப்போது ஸ்காட்லாந்து தேசத்தில் கடலோடு நேரடியான தொடர்புள்ள கைல் என்ற காயலில் நடத்தபட்டு வருகின்றன”

ஒரு புறம் சர்வ நாசத்திற்காக அணுகுண்டு போன்ற கருவிகரணங்களையும் மறுபுறம் தீவிர சிருஷ்டிக்கும் சமகதியில் உதவும் இந்த விஞ்ஞானம் கடைசியில் என்னென்ன விளைவுகளில் மனித குலத்தை ஆழ்த்துமோ!

## வெண்ணெய் திரளும்போது இனி தாழி உடையாது

ஏனென்றால், கடையாமலே வெண்ணெய் எடுக்கும் வழி கண்டுபிடித்திருக்கிறார்கள்.

தயிரையோ பாலையோ கடையாமலே வெண்ணெய் எடுக்கும் புது முறை ஒன்றை, பால்ப் பண்ணைத் தொழில் நுட்ப நிபுணரான ஜே. மாத்யூஸ் லண்டனிலுள்ளபிரிட்டிஷ் விவசாய என்ஜினீயர்கள் சங்கத்தில் செய்த பிரசங்கத்தின்போது விளக்கினார் என்று யார்க்ஷயர் போஸ்ட் தெரிவிக்கிறது.

இந்நவீனமுறையில் கையாளப்படும் கலக்கிப் பிரிக்கும் தகடுகள் அதிக கொழுப்புச்சத்துள்ள ஆடை உற்பத்தியாக வழிசெய்கின்றன. இந்தஆடை ஒரு தலை கீழ் மாற்றமடைகிறது. பாலிலுள்ளகொழுப்பு கொழுப்பிலுள்ள பாலாக அதாவது வெண்ணெயாக மாறி விடுகிறது.

இதைக் கண்டுபிடித்த ஸ்விட்ஸர்லந்து நாட்டினரான டாக்டர் ஜேம்ஸ் ஸென் என்பவரது பெயரைத் தாங்கிநிற்கும் இக்கருவியில் அதிக அழுக்கத்துடன் கரியமல வாயுவைப் பிரயோகிப்பதால் இம்மாற்றம் ஏற்படுகிறது. ஆடை வைத்த ஐந்தே நிமிஷங்களில் காகிதத்தில் சுற்றிய வெண்ணெய்கட்டி வெளியே தயாராய் வந்து விழுந்து விடுகிறது. முக்கால் மணி, ஒரு மணி நேரம் கடைவதைவிட இது எவ்வளவு சுலபம்.

இக்கருவி முழுவதுமே வெளிக்கு முழுதும் தெரியாதபடி மூடியுடன் அமைக்கப்பட்டிருப்பதால், உபயோகிக்க எடுக்கும் வரையில் வெளிச்சமோ காற்றோ வெண்ணெயைப் பாதிக்க இடமில்லை.

சிவாஜி

ஆசிரியர்: டி. சிவஞானம்

மாலை 11 | திருச்சி. 10—3—46 பார்த்திப, மாசி, 27உ. | மணி 16



# தேசமெங்கும் கேட்கும் தேர்தல் முழக்கம்

இன்று தேசமெங்கும் தேர்தல் மணி ஓசை திக்கெட்டும் காற்றில் கலந்தொலிக்கிறது. பற்பல மாகாணங்களிலும் பெரும்பான்மையான ஸ்தானங்களில் காங்கிரஸ் அபேட்சகர்கள் எதிர்ப்பில்லாமல் இணையற்ற வெற்றி பெற்றிருக்கிறார்கள், சென்னை மாகாணத்திலும் இதுவரை 70-க்கு மேற்பட்ட ஸ்தானங்கள் காங்கிரஸுக்குப் போட்டியின்றி கிடைத்திருக்கிறது.

இன்று காங்கிரஸ் இந்திய மக்களின் உள்ளத்தில் எத்தகைய மகத்தான ஸ்தானத்தை வகிக்கிறதென்பதற்கு இது ஒரு சான்று. 1942 ஆகஸ்டில் காங்கிரஸ் ஆளும் வர்க்கத்தை உடனே வெளியேறும்படி கேட்ட கோரிக்கை பொதுமக்களின் பரிபூர்ண ஆதரவைப் பெற்றிருக்கிறதென்பதை அன்னியரும் அகில உலகும் அறியும்படி அறிக்கையிடும் ஆணித்தரமான மார்க்கம் இது.

அன்னியர் தரும் பதவிப் பிச்சைகளுக்கு ஆசைப்பட்டு காங்கிரஸ் இன்று தேர்தலில் கலந்துகொள்ளவில்லை. தேசீயப் போரில் இன்று தேர்தலை ஒரு போர் முறையாகவே காங்கிரஸ் கொண்டிருக்கிறது. ஆகவே பொதுமக்கள் தங்கள் விடுதலை வேட்கையை உச்சக் குரலில் உலகம் அறியும்படி உரத்து நின்று கூவுவதற்கு ஒப்பாக தங்கள் ஒரே குரலான காங்கிரஸுக்கு அந்த அதிகாரத்தை ஒப்படைக்க முன்வருவது இயற்கையேயாகும்.

ஏனென்றால் நாற்பது கோடி மக்களின் சமுதாயம் முழுமைக்கும் ஒப்பற்ற உரிமைச் சின்னமாகவும் சுதந்திரப் போர்ச் சபையாகவும் விளங்கும் ஒரே ஸ்தாபனம் காங்கிரஸ்தான். இந்த உண்மையை உலகம் முழுமையும் நன்கு உணர்ந்து ஒப்புக் கொண்டிருக்கிறது. ஆனால் இன்னும் இந்தப் பேருண்மையை அறியாமலோ, அல்லது அறிந்தும் ஒப்புக்கொள்ள மனமில்லாமலோ சில தனி நபர்களும் சில்லறைக் கட்சிகளும் நம்மிடையே இருப்பதைக் காணும்போது அவர்களுக்கு இரங்குவதா அல்லது அவர்களது அரசியல் ஞான சூன்யத்துக்கு வருந்துவதாவென்று புரியவில்லை.

தேர்தல்கள் தனிப்பட்டவர்கள் அல்லது சிறு கட்சிகளின் சுயநலக் கோட்டை வாசலாக இருந்த காலம் ஒன்று உண்டு. அந்தப் பழைய நினைப்புதான் அவர்களை விடுதலை கையெட்டும் தூரத்தில் இருக்கும் நிலையில் ஒருமுகப்பட்டு ஊக்கத்துடன் முன்னேற வேண்டிய இந்த நெருக்கடியான நாட்களில்கூட, தங்கள் சுயநலத்தையும் ஆத்ம கௌரவத்தையுமே பெரிதாக நினைக்கும்படி செய்திருக்க வேண்டும்.

## காங்கிரஸிற்கே ஓட் கொடுங்கள்
## காரணம் சொல்வோம் கேட்டிடுங்கள்

நம்முடை நாட்டை நாம் ஆள
நன்மைகள் முன்போல் இனி மீள
எம்முடை ராஜ்யம் இதுவென்றே
இந்தியர் மகிழ்ந்திடல் சொந்தமென்றால்

தனி நபர்களைச் சந்தித்துக் கேட்டு வாக்குகளைப் பெற வசதியிருந்த மத்ய சட்டசபைத் தேர்தல்களிலேயே இத்தகைய சுயநலக் கோஷ்டிக்கு சரியான பாடம் கற்பிக்கப்பட்டிருந்தும் விலாசம் தெரிந்து விசாரிக்கமுடியாத லக்ஷக் கணக்கான வாக்காளர்கள் கொண்ட மாகாண அசெம்பிளித் தேர்தலில் என்ன துணிச்சலைக் கொண்டு அவர்கள் மீண்டும் கலை காட்ட ஆரம்பித்தார்கள் என்பதை நினைத்தால் அவர்கள் அறியாமைக்குத்தான் நாம் அனுதாபப்பட வேண்டியிருக்கிறது. பாவம், ஆசை வெட்கம் அறியாதல்லவா? சரியான சூடு கிடைத்தாலும் மறுமடியும் துடைத்துப் போட்டுவிட்டு பழைய புத்தி படைத்துவிடுகிறார்கள். ஆனால் ஒன்று.

இந்தத் தேர்தலுடன் இனி இத்தகையோர் பொது வாழ்க்கையில் தங்களுக்கு வேலையில்லையென்பதையும் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் நிழலில்தான் இனிப் பொதுமக்களை நேருக்கு நேர் சந்திக்கும் தகுதி பெற முடியுமென்றும் கட்டாயம் உணர்ந்துகொண்டு விடுவார்கள். இந்தத் தேர்தல்களில் இவர்கள் கொஞ்சம் ஆடித்தான் அடங்க வேண்டும்.

கம்யூனிஸ்ட் கக்ஷிக்காரர்கள் என்று ஒன்றேயரைக்கால் பேர் வழிகள் தங்கள் ஆட்களை மாகாணம் பூராவிலும் ஏழெட்டு இடங்களில் அங்கங்கே உதிர்த்துவிட்டு தேர்தலில் விளையாடுகிறார்கள். இவர்கள் தங்களைப் பலம் பொருந்திய ஒரு அரசியல் கக்ஷியென்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இவர்கள் பலமெல்லாம் இந்தியாவில் இணைக்கப்பட்டிருக்கவில்லை. இவர்கள் தங்கள் கம்பெனியை ரஷ்யாவில் இணைத்திருக்கிறார்கள்.

ரஷ்யாவின் அரசியல் கொள்கைகளில் என்னென்ன மாறுதல்கள் ஏற்படுகின்றனவோ அந்தப் பாட்டை இந்தியாவில் திருப்பிப் பாடுவதே இவர்கள் தொழில். இந்த உண்மையை இவர்கள் மறைக்க முடியாது. பொது ஜனங்களிடம் காங்கிரஸின் செல்வாக்கைச் சீர்குலைப்பதில் இவர்கள் முயற்சிகள் ஒன்றும் நடைபெறாது. இவர்களை இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களில் யாரும் அறியமாட்டார்கள்.

சில நகரங்களில்தான் இவர்கள் குரல் கேட்கிறது. காங்கிரஸ் மஹாசபையின் போர்முரசுக்கு முன்பு இவர்களுடைய ஓட்டைத் தம்பட்டம் உயர்ந்து குரல் கொடுக்கும் என்று கருதவேண்டியதில்லை. பண்டித ஜவஹர்லால், பட்டேல் போன்ற தலைவர்கள் இவர்களின் சுயரூபத்தை அம்பலப்படுத்திவிட்டார்கள். காங்கிரஸ் மக்களுக்குச் சாதித்த காரியங்களை இவர்கள் தங்களுடையதென்று போலிப் பெருமை அடித்துக் கொள்ளுகிறார்கள். இவர்கள் சாதித்ததெல்லாம், போராட்டக் காலங்களில் பேடித்தனத்தையும், அமைதியாக சிந்தித்துச் செயலாற்றவேண்டிய நாட்களில் குழப்பத்தையும் உண்டாக்கி விடுதலைப் போருக்கு முட்டுக்கட்டை போடுவதுதான்.

காங்கிரஸ் இந்திய மக்களின் தேசீய அபிலாஷைகளை வளர்த்திருக்கிறது. கருப்பர்களென்றும், அடிமைகளென்றும், கூலிகளென்றும் நம்மை அவமதித்துவந்த அன்னியர் இன்று நம்மை மனிதர்களென்று மதிக்கவும், சமரஸம்பேசவும் முன் வரும்படிச் செய்தது காங்கிரஸ். அஞ்சி அஞ்சிக்கிடந்த அடிமை மக்கள் இன்று ஆர்ப்பரித்தெழுந்து "அன்னியனே வெளியேறு" என்று கட்டளையிடும் துணிவையும் பலத்தையும் தந்தது காங்கிரஸ். பதவிகளைக் கைப்பற்றி இன்று நாட்டில் உண்டாகியிருக்கும் குழப்பங்களையும் பஞ்சத்தையும், வறுமையையும் போக்கவும், சர்வதேசீயப் பிரச்னைகளில் இந்திய விருப்பத்தைச் சாதிக்கவும் விரும்பியே காங்கிரஸ் தேர்தலில் கலந்திருக்கிறது.

நம்முடைய நாட்டை நாம் ஆளுவதே முறையென்று நாம் உணரச் செய்தது காங்கிரஸ். தேச விடுதலைக்குப் பல தியாகங்களைப்புரிந்த லக்ஷோபலக்ஷம் தேச பக்தர்கள் பலி பீடத்தில் தங்களை அர்ப்பணிக்கச்செய்ததின்மூலம் தேசீய பலத்தை உருவாக்கியது காங்கிரஸ். விடுதலையைக் கொண்டுவரும் திறமைபடைத்தது காங்கிரஸ். அதை ஆதரிப்பது பொதுமக்களின் கடமையல்ல, பொதுமக்கள் ஒவ்வொருவருக்கும், மஞ்சள் பெட்டியில் ஓட்டுப்போடுவது தடுக்கமுடியாத உரிமை. அதற்குக் குறுக்கே நிற்கும் கோடாரிக்காம்புகள் இருந்த இடம் தெரியாமல் வீழ்த்தப்படுவது நிச்சயம். விடுதலை விரைய சுதந்திரதாகம் அடங்க காங்கிரஸ் வெற்றியே இன்றியமையாததாகும்.

இதை மக்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள். காங்கிரஸுக்குப் போடும் ஒவ்வொரு வோட்டும், அடிமைத்தளை அகல, அன்னிய ஆதிக்கம் நீங்கப்போடும் பெரும் வேட்டாகும். அதை அவர்கள் செய்வார்கள். தேர்தல் மணியோசையைத் தொடர்ந்து இரண்டு வாரங்களில் வெற்றிச்சங்கு முழங்குவதைக் கேட்போம்.

# சோற்றுப்பிரச்னையே பெரிதாகிவிட்டது

## சுதந்திரப் பிரச்னையைச் சிந்திக்க நேரமில்லை

### பசி வந்திட......

"ஸ்ரீரா"

ஆங்கில எழுத்தாளர் ஒருவர் இப்போது இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருக்கிறார். அவரது பெயர் எச். என். பிரெயில்ஸ் போர்ட் (Brailsford). பஞ்சாபில் இருந்து அவர் எழுதிய கட்டுரையின் கடைசி பாகத்தை நேயர்கள் கவனிக்க வேண்டும் :—

"இந்தியர்கள் நம்மிடம் சுதந்திரத்தைக் கோருகிறார்கள். ஆனால் அதை அடையுமுன் கோடிக்கணக்கானவர்கள் பட்டினியால் வாடி வதங்கி இறந்துபோகும் நிலையிலிருக்கிறார்கள். அவர்களது தலைவர்கள் ஐக்கிய நாடுகள் சங்கத்தையும், உன்ராவையும், அமெரிக்காவையும் ஆவலோடு பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் பிரிட்டிஷ் பொறுப்பு மற்றவர்களுடையதைவிட மிகப் பெரியது. இன்னும் இந்த தேசத்தை நம் கட்டைவிரலின் கீழ்தான் வைத்திருக்கிறோம். கோடானுகோடி மக்களின் உயிர் நம் கையில் இருக்கிறது. நம்முடைய மூதாதையர்கள் அதிகப்பிரசங்கித்தனமாக ஏற்றுக்கொண்ட பொறுப்புக்கு நாம் அருகதையுள்ளவர்களாக இருக்கவேண்டுமானால், நாம் இந்த மக்களுக்கு சுதந்திரம் கொடுத்து விடவேண்டும். ஆனால் இதற்கு முன்னால் நம்முடைய பங்கீடுகளைக் குறைத்துக்கொள்ளவேண்டும்"

"சோறு முன்னே, சுதந்திரம் அப்புறம்" என்று கதறும் நிலையில்தான் நாம் இருக்கிறோம். சென்னை மாகாணத்தில் மாத்திரமே இரண்டு ஜில்லாக்களில் கொடிய பஞ்சம் தொடங்கி விட்டதாக அரசாங்க அதிகாரிகளே அறிவிக்கிறார்கள். "பஞ்சம் வந்துவிட்டது. கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன" என்று பிரத்தியேக பேட்டிகளில் பிரசங்கம் செய்கிறார்கள். என்ன நடவடிக்கை, என்ன கஷ்டம், சமாளிக்க முடியுமா என்றெல்லாம் கேள்வி கேட்டால் பதில் இருக்க முடியாது.

ஆளுபவர்கள், ஆளப்படுபவர்கள் இருவரும் ஒரே ஒரு விஷயத்தில் ஒற்றுமையாகி விட்டார்கள்! அதாவது இருவரும் குழப்பமடைந்திருக்கிறார்கள். எங்கே கண்டாலும் பயமும், கோபமும் தலைவிரித்தாடுகிறது. துருப்புகளுக்கு தினம் தினம் பறக்கும் எச்சரிக்கைகள், தந்திகளிலிருந்து இது வெட்ட வெளிச்சம்.

யார் பேரில் குற்றம் என்று கேட்டால் எல்லோரும் தங்களைத் தவிர மற்றவர்களைப் பார்க்கிறார்கள். வாயில்லாத ஜீவன்களான மழையையும், காற்றையும் தைரியமாகத் திட்டுகிறார்கள். இது அடாமிக் சகாப்தம் என்று சொல்லப்படுகிறது. ஆனால் நிலச் சாகுபடிக்கு ஆகாயத்தைப் பார்த்த வண்ணமே இந்திய மக்கள் ஏங்கி இருக்கிறார்கள்.

தேசத்தில் தற்போதைய உணவு நிலைக்குப் பலகாரணங்களைக் குறிப்பிடலாம் :—

1. சண்டைக்காலத்தில் சாதாரண விளைச்சலிலிருந்து கொள்ளைக்கார சாம்ராஜ்ய சாதனங்கள் மூலமாக இந்தியா சூறையாடப்பட்டது. அரசாங்கத்தார் இதை மறுக்கிறார்கள். ஆனால் அரசாங்கம் ஓயாமல் இன்னும்கூட உணவுப் பொருள்களை வெளியே அனுப்பிக் கொண்டிருப்பதாகச் செய்திகள் சுழன்று கொண்டிருக்கின்றன.

புதிய ஹரிஜன் இதழில் இதுசம்பந்தமாகப் பல பயங்கரமான செய்திகள் வெளிப்பட்டிருக்கின்றன. 1943-ம் வருடம் ஆகஸ்ட் மாதத்தோடு உணவுப் பொருள் வெளியேற்றம் நின்றுவிட்டதாகக்கூறும் அரசாங்கத்தார் பம்பாயிலிருந்து ஹரிஜனுக்கு எழுதப்பட்ட பின்வரும் கடிதத்துக்கு என்ன பதில் சொல்கிறார்கள் என்று தெரியவில்லை—டாருங்கள்.

"...சென்ற மாதம் நம்முடைய புதிய கப்பல் வந்து சேர்ந்தது. சென்ற வாரம் 14—2—46உ அது வெளிநாட்டுக்கு அனுப்பப்பட்டபோது 2951 மூட்டை பருப்பை ஏற்றிச்சென்றது" இன்னும் கேளுங்கள் :—

"...சென்ற மாதம் 'பீகம்', 'ஜெலஜ் ஜோதி' என்ற கப்பல்களில் 35000 மூட்டை தானியங்கள் கொழும்புக்கு அனுப்பப்பட்டன. ஒவ்வொரு மாதமும் அதிகாரிகளுக்குத் தெரிந்து இந்த மாதிரி நடக்கிறது".

இந்தச் செய்திகள் முழுவதும் பொய் என்று மறுக்கப்படுகிறதா? அரசாங்கத்தின் அறிக்கைகள் பொய் என்று ஒப்புக்கொள்ளப்படுகிறதா? நெருப்புக் கோழியைப்போல் தலையை மணலில் புதைத்துக் கொண்டிருந்தால், பொய்களைத் திருப்பித் திருப்பிச் சொல்லி நம்மை நாமே நம்பவைத்துக்கொள்ளுவதில் ஈடுபட்டிருந்தால், பஞ்சத்தைத் தடுத்துவிட முடியுமா?

2. கணக்கு வழக்கில்லாத உணவு பதார்த்தங்கள் ராணுவத்தாரால் வீணுக்கப்பட்டன. இன்னும் வீணுக்கப்படுகின்றன. பாதி கடிக்கப்பட்ட ரொட்டித் துண்டுகள் அருகே இருக்கும் ராணுவ காம்புகளில் ஏராளமாகச்சிதறிக் காணப் படுவதாக செய்திகள் வருகின்றன.

3. இந்தியாவை பாசிஸத்திலிருந்து காப்பதற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட சிரமத்தில் கால் பங்கு எடுத்துக்கொண்டிருந்தால்கூட இந்தியாவைப் பஞ்சத்திலிருந்து காப்பாற்றி இருக்கலாம். உணவு சேகரம் பண்ணி வைத்துக் கொள்ளாமல், சாதாரண விளைச்சலையே கூட துர்விநியோகம் செய்தது பொறுப்பற்ற தன்மையாகும்.

மொகலாயர் ஆண்ட காலத்திலும், ஹிந்து சாம்ராஜ்யம் தலை நிமிர்ந்து நின்ற மத்திய காலங்களிலும்கூட உணவுப் பொருள்களை சேகரிக்கும் களஞ்சியங்கள் ஆங்காங்கே நிறுவப்பட்டு மக்களின் கஷ்டங்கள் தீர்க்கப்பட்டன. அவர்களுடைய புத்திசாலித்தனம்கூட 20-ம் நூற்றாண்டின் ஆளும் வர்க்கத்துக்கு இருக்கவில்லை என்பது வருந்தத் தக்க விஷயம்.

4. மழை இல்லை—காற்றில்லை. மழை நன்றாகப் பெய்த காலங்களில் ஜலத்தை சேகரித்துத் தேக்கி வைக்க ரிசர்வாயர்கள் எண்ணற்றவை கட்டப்பட்டிருக்க முடியும், இந்தியாவில் ஜல வசதிகளுக்குக் குறைவில்லை. உபயோகப்படுத்திக் கொள்ளாமலிருப்பது நம்குற்றம். இந்தக் காரியங்களை கவனிப்பதால்எவ்வளவோ பேருக்கு வேலையும் கொடுக்க முடியும். கண் போன பிறகு சூரிய நமஸ்காரம் செய்யும் கதையாய் எல்லாக் காரியங்களும் நடைபெறுகின்றன.

5. சுதந்திரம் வந்தாலும், வராவிட்டாலும் இந்தியாவின் ஏழைக்கு ஒரே கஷ்டம்தான் என்று நினைக்குமளவுக்குப் பொருளாதார நிலை கேவலமாக இருக்கிறது. டாடாக்களும், பிர்லாக்களும், அழகப்பாக்களும் தானதருமம் செய்யும் கூற்றே இதற்கு சான்று.

மகாத்மா காந்தியடிகள் மனிதனது அகப் பண்பை சுலபமாக மாற்றிவிட முடியும் என்று நம்புகிறார்—பிர்லாக்களையும், ஏனைய கோடீஸ்வரர்களையும் மக்களின் தருமகர்த்தாக்களாக மாற்றிவிட முடியும் என்று நினைக்கிறார். காந்தியடிகளின் நல்லெண்ணம் அவரது கண்ணை மறைக்கிறது. கடுமையான பொருளாதார மாற்றத்தின் மூலம்தான் இந்தியாவின் ஏழைக்கு நலன் ஏற்பட முடியும். உணவு இருந்தாலும் வாங்கக் காசு இல்லாதிருக்கும் இந்திய ஏழை உணவே இல்லாவிட்டால் என்ன செய்யப் போகிறான் என்று தெரியவில்லை.

6. அரசாங்கப் பணம், அதாவது மக்களிடமிருந்து வரிபோட்டு வசூலித்த பணம், பெரும் பங்கு அநியாயமான சம்பளங்களிலும், பென்ஷன்களிலும் செலவிடப்படுகிறது. இப்படி எல்லாம் சக்தி மீறிச் செய்யும் செலவுக்கு அவசியம், பலன் ஏதாவது உண்டா? துளிக்கூட ஒன்றுமில்லை.

ஃ ஃ ஃ

இதே மூச்சில் எத்தனை வேண்டுமாயினும் எழுதலாம். ஆனால், இது நம்முடைய நிலையை மாற்றமுடியாது.

அரசாங்கத்தைக் குறை கூறுவது அசட்டுத்தனம் — அரசாங்கம் தவறு செய்யவில்லை என்ற காரணத்தாலல்ல— அரசாங்கம் தான் தவறு செய்தது, ஆனால், அதன் பலனாக நமக்குக் கஷ்டம் வந்திருக்கிறது. அரசாங்கத்தைக் குறை கூறுவது நம்முடைய நிலையைச் சிறிதளவுகூட மாற்றமுடியாது, என்ற காரணத்தால் தான்.

ஃ ஃ ஃ

இந்த சந்தர்ப்பத்தில் ஒவ்வொரு தனி மனிதனும் என்ன செய்யவேண்டும் என்று மாகாத்மா காந்தியடிகள் நீண்ட கட்டுரை எழுதியிருக்கிறார். ஆனால் இதெல்லாம் ஓரளவுக்குத் தான் பலனளிக்க முடியும். வந்திருக்கும் கஷ்டம் தலையை மீறியது. தலைமீறிய பலத்தினால்தான் இந்தக் கஷ்டத்தை எதிர்க்க முடியும் — வேகம் சரியான வழியில் செல்ல வேண்டும்.

போர்க்காலச் சம்பளங்களிலிருந்து விடுபட்டு ஏராளமானவர்கள் வீடுகளுக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறார்கள். ராணுவம் கலைக்கப்படுகிறது. வேலையிலிருந்து ராணுவத்தினர் பலரை நீக்குவதற்கு அபாரமான பிரசாரங்கள் செய்யப்படுகின்றன.

சமீபத்தில் ஒரு ராணுவ கூடாரத்தில் கொத்தமங்கலம் சுப்புவின் "பொறந்த நாட்டெ நினைச்சுப் பாத்துப் பொறப்பட்டு வாங்க" என்ற நாட்டுப் பாடல் உயர்ந்தகாகிதத்தில் கவர்ச்சியாக அச்சுப் போடப்பட்டு விநியோகிக்கப்பட்டு வருவதாகத் தகவல் கிடைத்திருக்கிறது — வீட்டுக்குப் போகச் சொல்வதிலும்கூட என்ன லாகவம் பார்த்தீர்களா!

வேலையில்லாத் திண்டாட்டம், சோறில்லாத் திண்டாட்டத்துக்கு அருயிர்த் தோழன். வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க என்ன செய்யப்படுகிறது என்று தெரியவில்லை

சுதந்திரத்தை விட சோறுதான் இப்போது இந்தியாவை சாந்தப்படுத்த முடியும். இரு நூறு ஆண்டுகள் கஷ்டப்பட்டு மேற்கு தேசத்தவர்களுடன் உறவுவைத்துக் கொண்டதன் பலன், நாம் சரித்திரத்தைத் தலைகீழாகக் காண்பது தானா?

★

## நோட்டீஸ்

திருச்சி சப் கோர்ட்டு

O. P. 19/46

T. V. ஸ்ரீனிவாஸய்யங்கார் —மனுதார்.

ஸ்ரீரங்கத்தில் 14—4—45ல் இறந்து போன R. ஸ்ரீனிவாஸய்யங்கார் சம்சாரம் ஹேமாம்புஜம் என்கிற ஹேமாம்புஜவல்லி அம்மாளுக்கு மகி. டி. மு. கோர்ட் O. S. 349/41 டிக்ரிப்படி கிடைக்கவேண்டிய தொகையை வசூலிக்க வார்சு சர்டிபிகேட் மனு கொடுத்து அது 19—3—46உ ஈரங்கி போடப்பட்டிருப்பதால், ஆக்ஷேபணையுள்ளவர்கள் அன்று கோர்ட்டில் ஆஜராகித் தெரிவித்துக்கொள்ளலாம்.

M. V. கிருஷ்ணசாமி அய்யங்கார்,
B. A. B. L.

2—3—46. மனுதார் வக்கீல்.

# “நெருப்பிலே போடு!”



நாலைந்து மாசமாக மழையை எதிர்பார்த்து—எதிர்பார்த்து எங்கள் ஊர்க்காரர்களுக்கு சலிப்பும் ஏமாற்றமும்ஏற்பட்டுவிட்டது. பசுமையே காண்பதற்கில்லை. புல்பூண்டெல்லாம் பொசுங்கிக் கானல் பறக்கிறது! பாதாளச் சுரங்கம் போன்ற கிணறுகளின் அடியில் வந்துகொண்டிருந்த ஊற்றுக் கண்கள் நின்றுவிட்டன! இதற்கெல்லாம் தெய்வ கோபமல்லாது வேறென்ன காரணம் சொல்லமுடியும்? ஆகவே குளுமாயி அம்மனுக்கு சிறப்பு செய்யவும், விராடபர்வம் படிக்கவும் ஏற்பாடு செய்வதற்கு ஊர் கூட்டம் நடைபெற்றது. பேச்சை ஆரம்பிப்பதற்கு அண்ணவி ஐயரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். வீரப்பபிள்ளை முத்தாக் கவுண்டரைப் பார்த்து, “எங்கே நம்ம தம்பி கோட்டை (திருச்சி)யிலிருந்து வந்திருக்காணுமே? இங்கே வரலையா?” என்று கேட்டார். கவுண்டர் பதில் சொல்வதற்கு முன்பே “இங்கே இருக்குது, இங்கே இருக்குது” என்று கூட்டத்தின் கோடியிலிருந்து ஒரு குரல் கிளம்பிற்று.

சுப்பரெட்டி — தம்பி, குமாரசாமி! இப்படி முன்னாலே வாப்பா; படிச்சபிள்ளெ, ஏதாச்சு எங்களுக்குத் தெரியாததெ வந்து சொல்லாமே பின்னாலே குந்திகிட்டியே! [பலருடைய வற்புறுத்தலின்பேரில் புதுப் பெண்போல நாணிக்கோணி வந்துட்கார்ந்தான்.]

சு-ரெ — பள்ளிக்கூடத்திலே என்ன படிக்கிறே? ராமாயணம்-பாரதமெல்லாம் சொல்லித்தாராங்களா?

குமா — கொஞ்சம் கொஞ்சம் சொல்லித்தராங்க!

சு-ரெ-கொஞ்சமின்னா எம்புட்டு?

குமா- பத்துப்பதினஞ்சு பாட்டு.

சு-ரெ— யாரு வாத்தியாரு? அம்மாம் பெரிய புத்தவத்திலே பத்துப் பாட்டுதானா சொல்லித்தராக?

கருப்பன் செட்டி — எங்கே படிக்கிறானுவ? போன மாசம் கடைக்கு சரக்கு வாங்க கோட்டைக்கு போயிருந்தேன்; பள்ளிக்கூடத்து பசங்க எல்லாம் தெருவிலே கூட்டமா நின்னுகிட்டு “சேகுந்து — செகுந்து”ன்னு தொண்டை கிழியக் கத்திகிட்டு நிக்கிறானுவ! ஏன், தம்பி நான் சொல்றது பொய்யா?

குமா— நிசந்தான்!

சு-ரெ-செகுந்துன்னாஎன்னதம்பி?

குமா— செகுந்திலே தாத்தா, ஜெய் ஹிந்த்!

சு-ரெ— அப்படின்னா?

[அண்ணவிஐயர்வந்துஉட்கார்ந்து செருமிக்கொண்டார். தான் வந்திருப்பது எல்லாருக்கும் தெரியவேண்டுமல்லவா?]

குமா — இந்தியாவைக் கும்பிடுகிறேன் என்று அர்த்தம்.

அ-ஐயர்— வந்தேமாதரம் போச்சா!

குமா- இல்லை, அதுவும் இருக்கு.

அர்ச்சகர் கோபாலையங்கார்— பின்னே எதுக்கு இந்த ஜேஹிந்து? வந்தேமாதரம்போல சொல்ல நல்லாவா இருக்கு?

வீ-பிள்ளை — ஏன் நல்லாயில்லே? அமிர்தம்போல இருக்கு, ஆனந்தமாயிருக்கு; தொண்டு கிழவனும் சண்டைக்குத் தயார் என்கிற மாதிரி இருக்கு!

நல்லுநாயக்கர்— பேப்பரு படிக்கிறாரல்ல, அதனாலே பிள்ளை நடக்கிற பாதையே புதுசு! சொல்றதும் வேடிக்கைதான்!

குமா— ஐயா முந்தி சொன்னது தான் சரி, ஜெய் ஹிந்த் என்றாலே ஒருவேகம்சுறுசுறுப்புஉண்டாகும்!

சு-ரெ— அதென்ன, மந்திரமா?

குமா— மந்திரமட்டும் அல்ல. தந்திரமுங்கூட! சுபாஷ் சந்திரபோஸ் என்று கேட்டிருக்கலாமே?

கோ-ஐ— ஜெயிலிலே இருந்து ஒருத்தருக்கும் தெரியாமே ஓடிட்டானே அவன்தானே?

குமா — சாமான்யமா சொல்லிடாதிங்க; மகான்! அந்த மகான் பினங்கு, சிங்கப்பூர், பர்மா முதலான தேசங்களிலே இருந்த நம்ம வங்களைக் காலிகளும்—கூலிகளும் கஷ்டப்படுத்தாமே இருக்கவும், வெள்ளைக்காரனை நம்மதேசத்திலே இருந்து விரட்டவும் ஒரு பெரிய பட்டாளம் சேர்த்தார்! அந்த பட்டாளத்திற்குச் சொல்லிக்கொடுத்த மந்திரம் ஜெய் ஹிந்த்!

கோ-ஐ— போஸையா மகான் என்கிறே? வேணும்னா வீரன்னு சொல்லிக்கோ!

வீ-பி— வெறும் வீரனல்ல— வீராதி வீரன்!

குமா— மகானுங்கூட! நம் தேசத்திலே இவ்வளவு காலமாய் எத்தனையோ மகான்களாலே பிரயாசைப்பட்டும் செய்து முடிக்காத காரியத்தை அவர் ரெண்டு வருஷத்தில் பூர்த்தி செய்து காட்டிவிட்டார்!

கோ-ஐ- வெள்ளக்காரனை விரட்டிட்டானா?

வீ-பி— உம்மைப்போல விதண்டாவாதிகள் இருக்கிறப்போ ஏன் வெள்ளையன் ஓடப்போறான்? சொல்றதெ பூராவும் கேளுமே!

குமா— சாதிசமயம் பாராமே ஆண் பெண் அத்தனை பேரும் ஒரே தாய் வயிற்றில் பிறந்த அண்ணன் தம்பி தங்கைபோல இருக்கச் செய்கிறதென்றால் சமான்யமா?

கோ-ஐ- ஜாதிசமயம்கெட்டஜனம் நம்ம நாட்டுக்கு ஆகவே ஆகாது!

அ-ஐயர்— நாஸ்திகர் அல்ல ஓய்; அவ்வளவு ஐக்யமாயிருந்தார்களென்று அர்த்தம்!

கோ-ஐ— நீர் சும்மா வாயெ மூடுங்காணும், அதெல்லாம் எனக்குத்தெரியும். குமாரசாமி!ஜேஹிந்து எப்படி மந்திர தந்திரமாகும்?

குமா—திக்கற்றுக்கிடந்த ஜனங்களுக்குத் தெம்பு கொடுத்ததனாலே மந்திரம்! ஒருத்தரும் மூகம் கோணாமே சொல்லச் செய்ததனாலே தந்திரம்!

கோ-ஐ— ஏன், வந்தேமாதரம்?

குமா— அப்படின்னாத்தான் இங்கே சாயபுங்க சண்டைக்கு வராங்களே!

(15ம் பக்கம் பார்க்க)

1

சிறு கதை

பொ. வாசுதேவன்

# என் சகுந்தலா



அது ஒருமாதிரி சம்பவம். அச்சம்பவத்தின் வளர்ச்சியே வாழ்க்கை. வாழ்க்கை பல சம்பவங்கள் நிறைந்தது.

மனிதனுக்கு வாழ்க்கையில் அருமையான சந்தர்ப்பங்கள் ஒன்றிரண்டுதான் கிடைக்கின்றன. சிலருக்கு அதைப் பயன்படுத்திக் கொள்ளத் தெரியவில்லை. நழுவவிட்டுப் பின் அதைக் குறித்து வருந்தவேண்டுவதாகிறது. தவறுதல் மனித சுபாவம்தானே? அதற்காக ஒருவன் ஆயுள் பூராவும் கண்ணீர் சிந்தவேண்டிய நிலைமை ஏற்பட்டால் அது மிகவும் கொடுமை அல்லவா?

என் சகுந்தலா விஷயத்தில் இந்த நிலைமைதான். ஏக்கம் தோய்ந்த என் நெஞ்சில் அவள் நினைவே இப்பொழுதும். என் அருகில் அவள் மணத்துடனும் எழிலுடனும் மலர்ந்துகொண்டு இருந்தாள். அவளை அடைய முயற்சிக்காது, நான் கானல் நீரைத் துரத்தி ஓடினேன். இப்பொழுது மனமுடைந்து சாவை உதவிக்கு அழைக்கிறேன்!

இன்று நேற்று நடந்ததுபோல் இருக்கிறது. ஆனால் மூன்று வருடங்கள் ஓடி மறைந்துவிட்டது. என் வாழ்க்கையின் சோக நாடகம் முடிவடைந்தது. அப்பொழுது நானும் என் தாயும் சென்னையில் வசித்துக்கொண்டு இருந்தோம். என் படிப்பு இண்டர்மீடியட்டோடு நின்றுவிட்டது. தாய்க்கு ஒரே பிள்ளை நான். அதனால்தான் அப்பா காலமானதும் படிப்பை நிறுத்திவிட்டு கிராமத்திற்கு வந்தோம்.

அம்மாவுக்குப் பெண்குழந்தைஎன்றால் உயிர். பாலில்லாக் குறையை மோரைக் கொண்டு தீர்ப்பதுபோல, அவள் அண்ணன் மகள் சகுந்தலாவை அழைத்து வந்தாள். அவள் வரும்பொழுது மலாராத புஷ்பம். செக்கச்செவேல் என்ற மேனி. மூக்கும் முழியுமாக இருப்பாள். சிரித்த முகம். சதா கலகலவென்ற பேச்சு.

"அத்தான்...அத்தான்" என்று கனிவுடன் அவள் அழைத்தால் என் மனம் பூரிக்கும். இப்பொழுது நினைத்தாலும் சிலிர்க்கிறது. அவளது உறவாடும் போக்கே அலாதி. குறும்புடன் கூடிய ரஸமான பேச்சே தனி அழகு.

அம்மா அவளைத் தன் பெண்ணெனப் பாவித்துச் செல்லமாக நடத்திவந்தாள். உண்மையைச் சொல்லப்போனால் தன் வருங்கால நாட்டுப்பெண்ணாகத் திர்மானித்துவிட்டாள்.

எனக்கு அவளை மணப்பதில் ஆக்ஷேபமே இல்லை. அவள் அதைப்பற்றி அபிப்பிராயமே கொடுக்கவில்லை. பெண்கள் அபிப்பிராயம் தெரிவிக்காதது சம்மதத்தின் அடையாளம்.

சகுந்தலா என்னிடம் எவ்வளவு மதிப்பும் அன்பும் வைத்திருந்தாள் என்பதைப் பலவிதங்களிலும் அறிந்தேன்.

அந்த வருடம் தீபாவளி அன்று அவளுக்காக வாங்கிவந்த 'ரிப்பன்' பார்டர் நீலநிறப்புடவையைஅவள்காணும்போது அக்கண்களிலும், முகத்திலும் நான் கண்ட ஜாலங்கள், ஆகா! மனிதன் வாழ்க்கையில் சில சந்தர்ப்பங்களில் சில வினாடியே மெய்மறந்து இன்பமனுபவிக்கிறான். மற்றக் காலங்களில் எல்லாம் மனிதனுடைய வாழ்க்கையில் வெறும் இயக்கமே.

நீலப் புடவை கட்டிக்கொண்டு பறந்தோடி வந்து முகத்தில் நகை குலுங்க எனக்கு நமஸ்காரம் செய்தாள். என் உள்ளத்தில் அக்காட்சி இப்பொழுதும் நிலவி நிற்கிறது. சௌந்தர்யமே உருவெடுத்து என்முன் நிற்பதுபோலிருந்தது. என் கண்களில் பிரதிபலித்த ஆவேசம் அவளைக் கலவரப்படுத்திவிட்டதோ என்னமோ, குனிந்து நின்றாள் மிரண்டு விழித்து.

"சகுந்தலா!"

"என்ன, அத்தான்!"

"இந்தப் புடவை உனக்கு எவ்வளவு அழகாயிருக்கிறது தெரியுமா?"

"நிஜமாகவா?"

அவள் வேறு எங்கேயோ பார்த்துக் கொண்டிருக்கும் பாவனையில் நின்றாள். கடைக்கண் என் நிலைமையை உணர்ந்து பரிகாசித்துக்கொண்டிருந்தது.

நான் மெள்ள அவளருகில் சென்று கரத்தைப்பற்றினேன். அவள் கையின் நடுக்கமும் உணர்வும்......எனக்கு என்னமோபோலிருக்கிறது, இப்பொழுது நினைத்துப்பார்த்தாலும்.

"அம்மா கூப்பிடுகிறார்போலிருக்கிறது" என்று நகர்ந்தாள் நகைமுகத்துடன்.

அம்மா கூப்பிடவும் இல்லை, ஒன்றுமில்லை. பெண்கள் உபயோகிக்கும் பாசாங்கு ஆயுதம் என்று எனக்குத் தெரியும். வாசற்படியில் நின்று என்னைப் பார்த்த பார்வையில் "என்ன அத்தான்! கிணற்று நீரை வெள்ளமா கொண்டுபோகப்போகிறது? நான் உங்களுடையவள்தானே" என்ற வார்த்தைகளின் அர்த்தத்தை நான் உணர்ந்தேன்.

என் ஊரே சொல்லிக்கொண்டது, நாங்கள் அடுத்த வருடத்தில் சதிபதிகளாகப்போகிறோம் என்று.

இந்த சமயத்தில்தான் காலம் என் விஷயத்தில் சதிசெய்தது.

2

எங்கள் வீட்டிற்கு எதிர்வீடு வெகு நாளாகப் பூட்டப்பட்டிருந்தது. அதன் சொந்தக்காரர் வெளியூரில் ஏதோ உத்யோகத்தில் இருந்தார். ரிடையர் ஆனதும் தனது சொந்த கிராமத்துக்கு வந்துசேர்ந்தார், குடும்பத்துடன். குடும்பத்தில் ஒரு பெண், ஒரே பிள்ளை. பெண்ணுக்கு சுமார் 15 வயதிருக்கும். பிள்ளை அவள் தம்பி. தாயில்லாக் குழந்தைகளை மறுமணம் புரிந்துகொள்ளாது தாய்தந்தையாக இருந்து அவரே காப்பாற்றிவந்தார். எதற்கெடுத்தாலும் 'கமலா, கமலா' என்று பெண்ணைத்தான் கூப்பிடுவார்.

கமலா வந்த புதிதில் ராங்கியோடுதான் இருந்தாள். பட்டணத்தில் இருந்தவள், படித்தவள். என்ன சிங்காரம். வேளைக்கு ஒரு டிரஸ். அவள் புது மோஸ்தர் ஒரு பரபரப்பை உண்டுபண்ணியது கிராமத்தில்.

சுருங்கச்சொன்னால் என் மனம் அவளை நாடியது. அச்சிங்காரி ஒரு வாரகாலத்திற்குள் என்னை மயக்கிவிட்டாள். எனக்காக வீட்டில் ஒரு பெண் வளர்ந்து வருகிறாள், என்மீது முழு அன்பு செலுத்துகிறாள், எங்களுக்குள் முடிவு போட்டாய்விட்டது என்பவைகளை நான் அறவே மறந்தேன்.

அம்மா கல்யாணத்திற்கு முனையஆரம்பித்தாள். எனக்கு திகில்தான். அந்த வருஷம் எனக்கும் சகுந்தலாவுக்கும் கல்யாணம் ஆகாமல் இருந்தாலேதேவலை போல் தோன்றியது. அதைக் குறிப்பாக வெளியிடவும் ஆரம்பித்தேன்.

இதற்கு நடுவில் கமலாவைக் கண்டு பேச சமயம் கிடைக்காமல் இல்லை. நான்தான் காத்துக்கொண்டு இருந்தேனே எப்போது சந்தர்ப்பம் என்று! அவள் தகப்பனார் என்னை அடிக்கடி கூப்பிட்டுப் பேச ஆரம்பித்தார். ஜாடைமாடையாகக் கமலாவும் எங்களுடன் கலந்துகொள்வாள். அக்காலங்களில் எல்லாம் நான் அவள் கவனத்தைக் கவரப்பட்ட பாடு அப்பப்பா சொல்லமுடியாது.

3

என்றுமில்லாது அன்று கமலா என் வீட்டிற்கு வந்தாள். அம்மா அவளை அவ்வளவாகப் பாராட்டாமலிருந்தது எனக்குக் கோபங் கோபமாய் வந்தது. மனையில் உட்கார்ந்து காபி சாப்பிட்டாள். உடனே 'வீல்' என்ற சப்தம். நான் அலறிப்புடைத்துக்கொண்டு அவளிடம் வந்தேன். தேள்......கொட்டிவிட்டது என்று அழுதாள். கலவரத்தில் என் கைகள் அவள் கையைத் தாங்கின. ஸ்பரிசம் என்னைப் பைத்தியமாக்கியது. கொட்டுவாய்க்குமேலே கயிற்றினால் கட்ட நான் ஒரு யுக காலம் தவித்தேன். பிறகு அரைபூராவும் அமளி. தேள் அகப்படவில்லை. எவளிடம் நான் மதிப்பை எதிர்பார்த்து ஜாக்கிரதையாக நடந்துகொண்டேனோ அவளை என் வீட்டிலேயே அவஸ்தைக்குள்ளாக்குவதென்றால்?

"சிலாம்பு குத்தியிருக்கும்...விஷம் ஏறவில்லையே?" என்றாள் சகுந்தலா கமலாவைக் கூர்மையாகக் கவனித்து. கமலாவின் முகத்தில் இருந்த மலர்ச்சி மங்கியது. பெண்ணுள்ளம் பெண்ணுணர்ச்சியை வெகு சுலபமாகக் கண்டறிந்துவிடுகிறது. சகுந்தலா கமலாவின் சாகஸத்தைக் கண்டு கொண்டபோதிலும் அச்சமயத்தில் எனக்கு அவள் பேரில் ஆத்திரம்தான்.

கமலாவை ஒருமாதிரி சமாதானம் செய்தேன். இப்பொழுது நினைத்தாலும் பரிகாஸச்சிரிப்புதான் வருகிறது. ஆனால் வாலிபத்தில் ஆசைமேலீட்டால் புத்தி தடுமாறி நாம் செய்யும் அசட்டுக் காரியங்கள் பல. சகுந்தலா கமலா போகும்வரை என்னையே பார்த்துக்கொண்டு இருந்தாள் ஒரு மாதிரியாக. அன்றிரவு எனக்குத் தூக்கம் பிடிக்க வில்லை. ஒரே போராட்டம். கடைசியாக என் மனதில் படர்ந்த உருவம் "கமலா"வினுடையதுதான்.

காலையில் வழக்கம்போல் அறைக்குக் காப்பி வரவில்லை. கீழே சென்றேன். அம்மா காப்பி போட்டுக் கொண்டிருந்தாள். ஆச்சரியமாக இருந்தது.

"குழந்தை கொஞ்சம் தூங்கிவிட்டாள்...பாவம்!...ராத்திரி தலைவலி என்று முனகிக்கொண்டிருந்தாள்."

சகுந்தலாவுக்குத்தலைவலிமட்டுமா? அப்போது அவள் நரக வேதனையே அனுபவித்திருப்பாள்.

"ஏண்டாப்பா, நான்பேச்சுப்பிராக்கில் சகுந்தலாவைக் கேட்டேன், அவள் என்னடா வென்றால் உன்னைக கல்யாணம் பண்ணிகொள்ள மாட்டாளாமே, என்னடா நடந்தது."

"ஒன்றுமில்லையே, அம்மா. அவளுக்கு இஷ்டமில்லாவிட்டால் வேண்டாம்."

என் ஆண்மைக்கு—இல்லை—வெட்கங்கெட்ட நடத்தைக்கு சகுந்தலா முடிவு சரியான சவுக்கடி. மனிதனின் வெட்கங் கெட்ட போக்கை அறிவுறுத்த சமயம் வந்தால் அதற்காக ஏன் அவ்வளவு ரோஷம்.

வெகுண்டவெறியில் எனக்காக அவள் செய்யும் "தியாகத்தின்" சிறப்பை நான் அறியவில்லை.

எனக்கும் கமலாவுக்கும் உண்டான நேசத்துக்கு அவள் தந்தையின் எதிர்பாராத சம்மதம் எங்கள் கல்யாணத்தை முடித்தது. சகுந்தலா அதுவரையில்தான் இருந்தாள். அந்தத் தியாகமே உருவெடுத்துவந்த பெண்ணை அழைத்துச் சென்றபோது எங்கிருந்தோ இருதயத்தைப் பீறிக்கொண்டுவந்தது பாசம். அவள் முகத்தைப் பார்க்கக் கூசினேன். அவள் கண்களைச் சந்திக்க எனக்கு தைரியம் வரவில்லை.

படர்ந்த சோகத்தை அக்கணமே மாற்றினாள் கமலா தன்உணர்ச்சி வேகத்தால்.

இன்பமாக நாட்கள் ஓடின. இரவு பகல் தெரியாமல் இரண்டு வருடங்கள்.

கமலாவும் ஒரு குழந்தைக்கு தாய் ஆகபோகிறாள் என்ற சந்தோஷம். ஆனால்............ பிரசவத்திற்கு கமலா வெகு சிரமப்படுவாள் என்று பட்டதால் பக்கத்து ஊர் ஆஸ்பத்திரியில்விட்டேன். கூடவே யமனையும் துணை கூட்டி அனுப்பினேனோ பாவி?

பிரசவித்த மூன்றாம்நாள் ஜன்னி கண்டது. மாலையில்கொஞ்சந்தேவலை. மருண்டு மருண்டு பார்த்தாள் என்னை. சொல்லமாட்டாத் துக்கம் அக்கண்களில்.

"கமலா பயப்படாதே"

"தைரியமாக இருக்கவேண்டியவர் நீங்கள்"

அவள் வார்த்தைகளின் அர்த்தம்!

"கண் கோவைபழம் மாதிரி இருக்கிறது. நீங்கள் படுத்துக்கொள்ளுங்கள் என்றாள் மறுபடியும்"

(11-ம் பக்கம் பார்க்க)



# சிவாஜி தர்பார்

## யார் இந்தக் கம்யூனிஸ்ட்கள்?

## தொழிலாளர்களே உஷார்!

### மாஸ்கோ பல்லவிக்குத் தாளம்போடும் கூட்டம்

### கபட நாடக சூத்திரதாரிகள்

*"பாலாஜி"*

இந்த தர்பாரில் பொதுஜன உணர்ச்சிக்கும் நன்மைக்கும் இன்றியமையாத பிரச்னைகள் மட்டுமே ஆராயப்படும். பொது ஜன உணர்ச்சியைப் பிரதிபலிப்பதும் அதற்கு ஆக்கம் தேடுவதுமே நமது குறிக்கோள். யாருடைய சொந்த விருப்பு வெறுப்புக்கும் இதில் துளிக்கூட இடம் கிடையாது.

சமீபகாலத்திய தர்பார் நடவடிக்கைகளைக் கவனித்துவந்த நேயர்கள் இந்தக் கொள்கையை நன்கு புரிந்துகொண்டு உற்சாகத்துடன் ஈடுபட்டு வந்திருக்கிறார்கள் என்பதை அறியும்போது தர்பார் தன் கடமையைச் செய்த திருப்தியையடைகிறது.

தர்பாரில் இப்போது பரிசீலனைக்கு வரும் பிரச்னை கம்யூனிஸ்ட்கள் விவகாரம். இந்தக் கம்யூனிஸ்ட்களின் போக்கு பொதுஜன நன்மைக்கு குந்தகம் விளைவிப்பதாகவும் அரசியல் உலகில் பெரும் தீமைகளை விதைப்பதாகவும் இருந்து வருகிறது. நடைபெறவிருக்கும் சென்னை மாகாண சட்டசபைத் தேர்தல்களில் ஒன்பது இடங்களில் அவர்கள் போட்டி போடுகிறார்கள். அவர்கள் போட்டியிடும் தொகுதிகள் அத்தனையும் தொழிலாளர் தொகுதிகளும், தொழில் மக்கள் நிறைந்துள்ள பொதுத் தொகுதிகளும் ஆகும்

இவர்கள் தேர்தலுக்கு நிற்கும் அடிப்படையான தைரியம் தொழில் மக்களின் வாக்குகள் தங்களுக்குத்தான் கிடைக்கும் என்ற நம்பிக்கை. பொதுஜனத் தொகுதிகள் அதாவது கிராமத் தொகுதிகளில் இவர்கள் தாங்கள் தலைவைத்துப் படுக்க முடியாதென்று நன்கு உணர்ந்திருக்கிறார்கள். உண்மையாகவே கிராமங்களில், கம்யூனிஸ்ட் என்று ஒரு அரசியல் கக்ஷி இருப்பதே யாருக்கும் தெரியாது. ஏன், காங்கிரஸ் ஒன்று தவிர வேறு எந்தக் கக்ஷியும் பற்றி கிராமத்து மக்களுக்குத் தெரியாது. காரணம் மற்ற எந்தக் கக்ஷிக்கும் கிராம வாழ்க்கையுடன் எந்தத் தொடர்புமே இல்லை.

நகரத்து நாகரீகச் சூழலில் தொழிற்சாலைப் புகை போக்கிகளைச் சுற்றி வட்டமிடும் கம்யூனிஸ்ட்களாகட்டும் வேறு எந்தக் கட்சியாகட்டும் கிராமத்து வாழ்க்கையின் அடிப்படைப் பிரச்னைகளுடன் என்ன செய்வதற்கிருக்கிறது. கிராம வாழ்க்கையின் அடிப்படையான கைராட்டைக்குப் புத்துயிரளித்து, நெடுங்காலத்துப் பீடையான தீண்டாமையைத் தீயிட்டுப் பொசுக்கி, வாயில்லாப் பூச்சிகளாகக் கிடந்தவர்களுக்கு வாக்குரிமையை உபயோகிக்கும் வன்மையளித்து, ஏழையின் வயிற்றை வற்றடிக்கும் மதுவரக்கனைக் கொன்று, இதன் பிறகே இந்திய வாழ்க்கை சீர்ப்பட முடியுமென்றும், விடுதலை பெறமுடியுமென்றும் கண்டுபிடித்து அதற்காக அல்லும் பகலும் அறுபதாண்டுகளாக அரும் சேவை புரிந்து அசைக்கமுடியாத பலம் பெற்றுத் திகழும் காங்கிஸ் ஒன்றே தங்களுக்கு வழிகாட்டும் என்பதைக் கிராம மக்கள் நன்கு அறிந்திருக்கிறார்கள். தான் தோன்றிகளும் தடபுடல் வாதிகளும் கிராமத்தில் எட்டி அடி வைக்க இயலாது.

நகரத்துத் தொழிலாளர்களுடன் மட்டும் இவர்களுக்கு இன்று தொடர்பு இருக்கிறதென்பது உண்மைதான். ஆனால் இந்தத் தொடர்பு ஒரு பொய்க்கால் குதிரை. இந்தத் தொடர்புக்கு அஸ்திவாரம் கிடையாது என்பது மட்டுமல்ல, இந்தத் தொடர்பு தொழிலாள சமூகத்துக்கு மிகவும் ஆபத்தை விளைவிக்கக் கூடியதாகும். கபட நாடக சூத்திரதாரிகளான இவர்களின் சரித்திரப் போக்கு இதை நன்கு நிரூபிக்கிறது. வரிசைக் கிரமமாக அதன் பல அத்தியாயங்களைப் புரட்டுவோம்.

1. மகாயுத்தம் நடைபெற்றபோது பிரிட்டனும் ரஷ்யாவும் நேசநாடுகளாக இருந்தன. கம்யூனிஸ்ட் ஆதாரபீடத்தின் போக்கு இப்படியாகிவிட்ட காரணத்தால் இந்தியாவிலும் கம்யூனிஸ்ட்கள் உடனே பிரிட்டிஷ்காரர்களின் இன்றியமையாத தோழர்களாக மாறினார்கள். இந்தியாவைக் கேட்காமலேயே யுத்தத்தில் அதை ஈடுபடுத்தியது தவறென்று காங்கிரஸ் கண்டித்த இந்த சமயத்தில் ரஷ்யாவின் மூடபக்தர்களான கம்யூனிஸ்டுகள் காங்கிரஸிலிருந்துகொண்டே இது பொதுஜன யுத்தந்தானென்று பிரசாரம் செய்து சர்க்காருக்குத் தாஸர்களாகத் தொண்டு புரிந்தார்கள். ஆகஸ்ட் எழுச்சியிலும் அதை ஒட்டிய காலங்களிலும் தேச பக்தர்களையும் புரட்சிக்காரர்களையும் சர்க்காரின் ஐந்தாம் படைகளாக இருந்து, காட்டிக் கொடுப்பதில் மிகவும் சுறுசுறுப்புடன் வேலை செய்தார்கள்.

2. நிலைமை மாற்றம் அடைந்து வெற்றி உறுதியான பிறகு, ரஷ்யாவுக்கும் பிரிட்டன் அமெரிக்காவுக்கும் உள்ளுக்குள் புரையோடிக் கொண்டிருந்த, ஆனால் யுத்தகால நெருக்கடியின் காரணமாகத் தலைகாட்டாமலிருந்த, பகைமையும்

(9-ம் பக்கம் பார்க்க)

# சிவாஜி



அறவலி காத்து நாளும் அன்னையின் பணிக்கென்றே நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினேம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. பார்த்திப-ஹூ மாசி-மீ 27-உ 10—3—46


## நகர வாக்காளர்களுக்கு

★

ஆம், சென்னை சட்டசபைத் தேர்தல் வந்துவிட்டது. திருச்சி மக்களின் தேசபக்திக்கும் அரசியல் ஞானத்துக்கும் ஒரு பரீட்சையாகவே இந்தத் தேர்தல் வந்திருக்கிறது.

நகரத்தில் உள்ள வாக்காளர்களில் பெரும்பாலோர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் என்ற முறையிலேயே ஓட்டுரிமை பெற்றிருக்கிருர்கள். இன்று உலகில் ஒவ்வொரு நிமிஷமும் நடைபெறும் அரசியல் வேலைகளும் போக்கும் அவர்களுக்கு மனப்பாடமாகத் தெரியுமென்று சொல்லலாம்.

அத்தகைய வாக்காளர்களின் தீர்ப்பை காங்கிரஸும் கம்யூனிஸ்ட் கக்ஷியும் போட்டியிட்டுக் கேட்கிருர்கள். வாக்காளர்கள் நன்கு யோசிக்கவேண்டும்.

இன்று நம்முன் மகத்தான பிரச்னைகள் இருக்கின்றன. சிம்லா மகாநாடு முறிந்தது. தூது கோஷ்டி வந்து சென்றது. மீண்டும் மந்திரிமார் மூவர் வருகிருர்கள், ஜனப்பிரதிநிதிகளுடன் கலந்து பேசி இந்திய எதிர்கால அரசியல் அமைப்பை நிர்ணயிக்க.

இந்த நிலைமையில் 'சட்டசபைகளுக்குச் செல்லும் ஜனப் பிரதிநிதிகள் தனித்தனியாகவோ சிறு கோஷ்டியாகவோ நின்று சாதிப்பதற் கொன்றுமில்லை. தேசீயக் கொள்கையில் நாம் கடைப்பிடிக்க வெண்டிய பல கொள்கைகளையும் கட்டுப்பாட்டையும் போலவே, தேசத்தின் வறுமையையும் பஞ்சத்தையம் தடுத்து நிறுத்தவேண்டிய வேலையும் இருக்கிறது. இந்த நிலையில் நாட்டின் நிர்வாகத்தையும் அந்தஸ்தையும் காக்க காங்கிரஸ் முன்வந்திருக்கிறது. அறுபதாண்டுகளாக நடக்கென்று, நம் விடுதலைக்கென்று, நம் வாழ்வுக்கென்றே அரும்பாடுபட்டு வரும் காங்கிரஸ் பொறுப்பேற்க முன்வந்திருக்கிறது. சின்னஞ் சிறு கோஷ்டியை நமக்கு எதிராகக் காட்டி சுதந்திரம் கொடுக்கும் பிரச்னையை ஒத்திப் போடுவதிலேயே நாட்டம் கொண்ட சர்க்கார் சமரஸம் பேச வரும் இத் தருணத்தில் ஒருமுகமாகத் தேசம் பூராவிலும் காங்கிரஸுக்குப் பக்கபலமாக நிற்க வேண்டும்.

காங்கிரஸ் அபேக்ஷகர் யார் என்பதைப் பற்றி யோசிக்கவேண்டியதில்லை. ஏனென்ருல் காங்கிரஸ் அபேக்ஷகர் யாராயிருந்தாலுமவர் காங்கிரஸின் ஆணைக்கு ராணுவ முறையில்கட்டுப்படுத்தப்பட்டவர். காங்கிரஸ் தேசமக்களின் நலனையும் தேசீய கௌரவத்தையும் வற்புறுத்தக்கூடிய சக்திபடைத்த ஒரே ஸ்தாபனம்.

ஸ்தாபனத்தின் ஒரு சிறு கருவி கூட பழுதாகாதபடிபார்க்கவேண்டியது நமது கடமை.

நம்முடைய மாகாணத்தில் மெஜாரிடி கிடைத்துவிடுவதென்பது அசைக்கமுடியாத உண்மை. அது பெரிதல்ல. ஒரு ஸ்தானம் கூட காங்கிரஸ் தோற்காமல் செய்யவேண்டியது அவசியமாகும்.

தனிப்பட்டவர்களுடைய குண பரிசோதனைகளோ, சொந்தவிருப்பு வெறுப்புக்களையோ பொருட்படுத்தாமல் மஞ்சள்பெட்டியை நிரப்பி தேசத்தின் இந்தநெருக்கடியைத் தீர்ப்பதில் தங்களுடைய கடமையைச் செய்வதில் சற்றும் பின்வாங்கக் கூடாதென்று கேட்டுக் கொள்ளுகிறேம்.

ஜே ஹிந்த்.

## திருச்சி ஜில்லா வாக்காளர்களுக்கு

★

### மஞ்சள் பெட்டியை மறவாதீர்

தேர்தல் நெருங்கிவிட்டது காங்கிரஸ் வெற்றி திருச்சி ஜில்லாவில் மற்ற ஜில்லாக்களுக்குச் சற்றும் பின்வாங்கக் கூடாது. அந்தந்தத் தொகுதி வாக்காளர்களும் தேர்தல் தினத்தன்று தாங்களாகவே மஞ்சள் பெட்டியில் தங்கள் வாக்குகளைப் போட்டு இனி யாரும் இந்த ஜில்லாவில் காங்கிரஸை எதிர்ப்பது அறியாமையென்பதை அறிவித்துவிட வேண்டும். திருச்சி கிராமத் தொகுதிக்கு இரண்டு ஸ்தானங்களுக்கும் நமது ஜில்லாவின் இரு பிரபல தலைவர்களான திரு. பி. ஆர். தேவரும் திரு. பி. பொன்னம்பலக்கவுண்டரும் போட்டியின்றி வெற்றிபெற்றிருக்கிருர்கள்.

#### திருச்சியில்

நெடுநாளைய காங்கிரஸ் ஊழியரும், தீவிரத் தொண்டருமான அன்பர் டி. எஸ். அருணசலம் காங்கிரஸ் அபேக்ஷகராக நிற்கிருர். கம்யூனிஸ்ட்டுகள் ஆர்ப்பாட்டமும் கூச்சலும் பலமாக இருக்கின்றன. தான் தோன்றிகளும் மாஸ்கோ உத்திரவின்படி மண்டியிடுபவர்களுமான கம்யூனிஸ்ட்களின் கும்மாளத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தாக வேண்டும். காங்கிரஸ் அபேக்ஷகர் சாதாரணமாக ஜெயித்தால் போதாது. வாக்குகளில் மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்யாசம் இருந்தால்தான் காங்கிரஸ் வெற்றியாகும். இதை மனதில் கொண்டு தேர்தலில் ஒவ்வொருவரும் தங்கள் நண்பர்களையும் கும்பலாகத் திரட்டிச் சென்று மஞ்சள் பெட்டியில் வாக்குகளை நிரப்பவேண்டும்.

#### பெரம்பலூர்-உடயார்பாளையம்

அரியலூர் தொகுதியாகிய இங்கு திருச்சி ஜில்லா போர்டுதலைவரும் இந்தத்தொகுதி வாக்காளர்களின் அபிமானத்துக்குப் பாத்திரமானவருமான திரு. பா. வெங்கடாசலம்பிள்ளை அவர்கள் தான் காங்கிரஸ் பிரதிநிதி. இது தவிர ஹரிஜனத் தொகுதியாகிய இதற்கு காங்கிரஸ் சார்பில் நிற்பவர் திரு. கக்கன் என்பவர். படித்த இளைஞர். சீர்திருத்த வாதி. இந்தத் தொகுதி வாக்காளர்களுக்குஇரண்டிரண்டு வாக்குகள் உண்டு. அதாவது இரண்டு அபேக்ஷகர்களுக்கு போடலாம். இரண்டையும்இரண்டு காங்கிரஸ் அபேக்ஷகருக்கும் தந்து தங்கள் கடமையைச் செய்ய வேண்டும்.

#### முசிரி-லால்குடி

இந்தத் தொகுதிக்கு கரிகாலி ராமையா என்ற பிரபல நண்பர் காங்கிரஸ் அபேக்ஷகராக நிறுத்தப் பட்டிருக்கிருர். இந்தத் தொகுதி காங்கிரஸ் ஊழியர்களும் அபிமானிகளும் நிறைந்ததாகும். இங்கு ஊழியர்கள், பொதுமக்களின்வாக்குகள்ஒன்றுவிடாமல் தேர்தலுக்கு உபயோகிக்கும்படி செய்யவேண்டும். இங்கு காங்கிரஸுக்கு எதிராக வாக்குகள் கிடைக்காதென்பது உறுதி பெருவாரியான வெற்றிக்கு அனைவரும் தேர்தல் தினத்தன்று தவருமல் சென்று மஞ்சள் பெட்டியை நிரப்பவேண்டும்.

திருச்சி ஜில்லா தேசபக்தியில் எந்த ஜில்லாவுக்கும் இளைத்ததில்லை. அதை மற்றும் ஒருமுறை நிரூபிக்க வேண்டிய சந்தர்ப்பத்தை வாக்காளர்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

### திருச்சி டி.. மு. கோர்ட்டு.

E. P. 1143/45 in S. C. 185/45

அருளானந்தம் பிள்ளை —அசல் வாதி
P. N. ராகவன் —மேடோவர் வாதி மனுதார்

தி. தா. பொன்மலை work Shopல் Time taker Supervisor வேலை, மயூா முதலியார் குமாரர் அருணசல முதலியார் 1; பாலம்மாள் wife of No. 1 at Do —1 and 2 பிரதிவாதிகள் எதிர்மனுதார்கள்

ஷை எதிர் மனுதார்கள் 1 and 2 பிரதிவாதிகளுக்கு.

மனுதார் மேடோவர் வாதி, தான் அசல் வாதியிடம் பெற்றிருக்கும் மேடோவரை Recognise செய்து கொண்டு உங்கள் ஜங்கம சொத்துக்களை ஜப்திசெய்து ஏலம்போடுவது மூலம் டிக்கிரி தகை வசூலிக்கவேணுமாய், மனுக்கொடுத்திருக்கிறபடியால், என் மனுப்படி கோர்ட்டில் உத்திரவு செய்யக்கூடாதோ அதற்குக் காரணத்தை தெரிவிக்க 22—3—46ந்தேதி போடப்பட்டிருக்கிறதை அறியவும். தாங்களோ தங்கள் வக்கீலோ ஷை கோர்ட்டில் பகல் 10 மணிக்கு ஆஜராகி தங்கள் கட்சியைத் தெரிவிக்காவிடில் நீங்கள் இல்லாமல் இருக்கையிலேயே ஷைமனு விசாரணை ஆகி முடிவடையும் என்பதைக் கண்டிப்பாய் அறியவும்.

N. வேணுகோபாலய்யர்,
மனுதார் மேடோவர் வாதி வக்கீல்.

(7-ம் பக்கம் தொடர்ச்சி)

குரோத உணர்ச்சியும் வெளிப்படையாகப் புகைய ஆரம்பித்த அதே நாளில் இந்தியக் கம்யூனிஸ்டுகளும் தங்கள் சட்டையை மாற்றிக்கொண்டுவிட்டார்கள்- அதன் பயனாக இப்போது தேசியக் கிளர்ச்சி என்ற புது வேஷத்தில் காக்ஷி தருகிறார்கள்.

மாஸ்கோ மகாத்மாக்களின் மனப்போக்கின் சலனங்களுக்கும் உருமாற்றங்களுக்கும் ஏற்ப இவர்கள் தாளம்போடக்கற்றுக்கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய இந்தக் கட்டுப்பாடும் உழைப்பும் கண்டிப்பானதுதான். ஆனால் அவ்வளவு திறமையையும் இவர்கள் எங்கோ கண்காணாத இடத்தில் உள்ள தங்கள் எஜமானர்களின் பொருட்டு, இந்திய மனப்பான்மைக்கும் தேவைக்கும் உரியதல்லாத-ஒவ்வாத கருத்துக்களுக்காக வீண்செலவு செய்கிறார்கள் என்பதுதான் பரிதபிக்கக்கூடிய விஷயம். இவர்கள் உலக சமுதாய ஒற்றுமை என்பதன்பேரால் இந்திய சமுதாய ஒற்றுமைக்குக் குழி தோண்டுகிறார்கள். ஆனால் இவர்கள் தோண்டும் குழியில் இவர்களே விழுந்துவிடப் போகிறார்கள்.

இவர்கள் நடத்தும் வேலை நிறுத்தங்களினால் தொழிலாளர் இயக்கத்தின்மீதே பொதுஜன வெறுப்பை வளருமோஎன்று ஐயுறவேண்டியிருக்கிறது. பொதுஜன ஆதரவின்றி எந்த இயக்கமும் வெற்றி பெறமுடியாது. சமீபத்தில் நடைபெற்ற பம்பாய் சம்பந்தமான கலவரங்களினால் பொதுஜன அமைதிக்குப் பாதகம் ஏற்பட்டதுமின்றி வேலை நிறுத்தம் செய்தவர்களுக்கோ, கப்பற்படை மாலுமிகளுக்கோ எந்த நன்மையும் ஏற்படவில்லை. சும்மா ஒரு தடபுடல் நடத்தி வைப்போமே, அதைக் கண்டாவது பொதுமக்கள் தங்களை வீரர்களென்றும் சுயராஜ்யம் கொண்டுவரும் சூரர்களென்றும் அன்னியரை வெளியேற்றும் அசகாயர்களென்றும் மயங்கிவிடுவார்கள் என்பதே இவர்கள் கருத்து.

காங்கிரஸின் தேர்தல் கொள்கைகளுக்குத் தங்கள் தேர்தல் கொள்கை முற்போக்குடையதென்று காட்டும் வித்தையே இது.

இந்த நாட்டின் பண்புக்கும் இன்றைய நிலைமைக்கும் சாத்யமில்லாத பலாத்காரச்செயல்களின் மூலம் தேசிய இயக்கத்தின் பலத்தை விரயம்செய்யும் இவர்கள் மக்களுக்குப் பெரும் அநீதியை இழைத்துவருகிறார்கள்.

இவர்கள் விஷயத்தில் பொதுமக்களும் தொழிலாளர்களும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். தேர்தலில் இவர்கள் மண்ணைக் கவ்வும்படி செய்யவேண்டியது மிகவும் அவசியமாகும்.

## கலைஞர் மறைவு

திருவையாறு பிரதர்ஸ் என்று பிரசித்திபெற்ற திருவாளர்கள் கணபதி, சுப்ரமண்ய சாஸ்திரிகள் இவர்களில் இளையவரான கணபதி சாஸ்திரிகள் நெடுநாள் நோய்வாய்ப்பட்டிருந்து சென்ற 15—2—46ல் திருச்சியில் தனது இல்லத்தில் காலமானார் என்று கேட்டு வருந்துகிறோம்.

கலா விற்பன்ன பரம்பரையில் வந்த சகோதரர்கள் தியாகராஜ ஸ்வாமிகள் வம்சத்தைச் சேர்ந்தவர்கள். திருவாடுதுறை ஆதீன சங்கீத வித்வான்கள். பிரபலமானவர்கள். இராமநாதபுரம் சமஸ்தான ஜலதரங்க வித்வான் சுப்பராமஅய்யர், குன்றக்குடி கோபாலகிருஷ்ண அய்யர், பிடில் கிருஷ்ணையர், பஞ்சுபாகவதர், நரசிம்மபாகவதா போன்ற வித்வான்களிடம் பயின்றவர்கள். சங்கராசாரிய ஸ்வாமிகள், திருவாவடுதுறை ஆதீனம், தேவக்கோட்டை, சிவகங்கை, இராமநாதபுரம் குறுநில மன்னர்கள், பித்தாபுரம் துணி சிற்றரசர்கள், போன்றவர்களால் பெரிதும் அபிமானிக்கப் பட்டவர்கள்.

ஸாது கணபதி சாஸ்திரிகள் வயது முதிர்ந்த தன் சகோதரரையும், மணமாகாத இரு குமாரிகளையும் சிறு ஆண் குழந்தைகளையும் மனைவியையும் விட்டு சென்றிருக்கிறார். அவர் மறைவு கலை உலகுக்கு ஒரு நஷ்டம். அன்னார் பிரிவால் வாடும் குடும்பத்திற்கும் நண்பர்களுக்கும் நமது அனுதாபம்.

★

## முசிரி - லால்குடி வாக்காளர்களுக்கு ஒரு வேண்டுகோள்.

முசிரி-லால்குடி பொதுத்தொகுதிக்கு நான் காங்கிரஸ் அபேக்ஷகனாக நிற்கிறேன். எலக்ஷன் தேதிக்குமுன் போதிய அவகாசம் இல்லாதபடியால் இந்தத்தொகுதியிலுள்ள ஒவ்வொரு வோட்டரையும் நான் நேரில் சந்தித்துப்பேச அசக்தனாயிருப்பதால், பதிவு செய்யப்பட்டுள்ள வோட்டுரிமை உள்ள ஒவ்வொரு நபரும் 20 8 46லயில் தங்களுடையவோட்டுகளை மஞ்சள் பெட்டியில்போடுவதோடு தங்களை சார்ந்த மற்றவர்களுடைய வோட்டுகளையும் எனக்கே கொடுக்கச் செய்தும் காங்கிரஸின் லட்சியத்தை வெற்றிபெறுமாறு அவரவர்களுடைய கடமையை நிறைவேற்றிவைக்கவேணுமாய் அனைவரையும் இந்தப்பத்திரிகை வாயிலாக நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஒவ்வொருவரும் அவரவர் கடமையைச் செய்தால் காங்கிரஸ் பொதுநன்மைக்காக தன் கடமையைச் செய்யும்.

N. P. ராமையா,
கரிகாலி,
மேட்டுப்பாளையம் P. O.
முசிரி தாலுக்கா.

# லக்ஷ்மி குறுக்கு எண் போட்டி 4

## முதல் பரிசு ரூ. 600

**பரிசுபெற்றவர்கள் 48 நபர்கள்**

**நபர் 1-க்கு ரூ. 12—8 0**

**மணியார்டர் 11—3—46ல் அனுப்பப்படும்.**

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| [1] 2 | 8 | 9 | 3 | ■ | [2] 1 | 2 | 9 |
| [3] 7 | 9 | L | ■ | [4] 2 | 3 | ■ | ■ |
| [5] 4 | 5 | N | [6] 7 | 6 | 8 | [7] 9 | ■ |
| 3 | ■ | C | [8] 2 | 1 | ■ | [9] 1 | [10] 8 |
| ■ | [11] 8 | [12] 1 | 5 | ■ | [13] 5 | 2 | 7 |
| [14] 6 | ■ | 4 | ■ | [15] 6 | 2 | ■ | ■ |
| [16] 5 | 6 | ■ | [17] 7 | 1 | 5 | [18] 7 | ■ |
| 4 | ■ | [19] 3 | 1 | 8 | ■ | [20] | 9 |

**COMPETITION No. 4**

We hereby certify that the above is the solution in original deposited with us by L.N.Cross words on 30—1—46 in a sealed cover which was opened in our presence and that a copy of the above solution has been lodged with the .. Bank.

FOR THE TRINITY BANK LTD.,
(Sd.) [illegible]
MANAGER.

தி திருச்சிருப்பள்ளி திருநிதி பாங்கியில் சீல்செய்து கொடுக்கப்பட்டிருந்த போட்டி ஆசிரியரின் சரியான விடை, பாங்கி உத்தியோகஸ்தரின் கையெழுத்துடன் பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. சரியான விடை அனுப்பிய **48** நபர்களுக்கு முதல் பரிசுத் தொகை ரூ. **600**ஐயும் நபர் ஒன்றுக்கு ரூ. **12—8—0** வீதம், **11—3—46**ல் மணியார்டர்மூலம் அனுப்பப்படும். **2**-வது, **3**-வது பரிசு பெற்றவர்கள் ஜாப்தா **17—3—46**ல் சிவாஜியில் வெளிவரும்.

---

**1.** ஜெ. ரெங்கராஜு, சிக்னலர், பம்பாய். **2.** ஆர். சீனிவாசலு, வண்ணாரபேட்டை, மதராஸ். **3.** சி. ராதாகிருஷ்ணன், காஞ்சீபுரம். **4.** கோபாலன், வேலூர். **5.** ஆர். ஜெகந்நாதன், வேலூர். **6.** எ. பிரான்சிஸ், தாம்பரம். **7.** ராஜகோபால் நாயுடு, நாச்சார்கோவில் **8.** எத்திராஜன், கும்பகோணம். **9.** ஜெம்பகலக்ஷ்மியம்மாள், கும்பகோணம். **10.** வீரராகவலு, பசுபதி கோவில். **11.** கே. சுப்பிரமணியன், பாபநாசம். **12.** ஜெயசிங், தஞ்சை. **13** கே. குப்புசாமி, தஞ்சாவூர். **14.** பார்த்தசாரதி, தஞ்சாவூர். **15.** காதர் உசேன், திருச்சி. **16.** வி. எஸ். ராமானுஜம், திருச்சி. **17.** டி. வி. ஆதிகிருஷ்ணமூர்த்தி, திருச்சி. **18.** வி. பாருகுட்டி அம்மாள், திருச்சி. **19.** என். ஆர். பாலுசாமி, திருச்சி. **20.** மரியபிச்சை, திருச்சி ஜங். **21** ஆர். சி. சேகர், உறையூர். **22.** டி. லலிதாபாய், திருச்சி. **23.** குப்பம்மாள், திருச்சி **24.** பி எம். துரைசாமி, திருச்சி **25.** கே வேலு, புதுக்கோட்டை. **26** ருக்மணிபாய், திண்டுக்கல். **27.** தாயம்மாள், மதுரை. **28.** சூசைமாணிக்கம், மதுரை, **29.** விஞயகமூர்த்தி, அம்பாசமுத்திரம். **30.** ஆர். அந்தோனி, சின்னல்பட்டி. **31.** பெருமாள், லால்குடி. **32.** எஸ். எ. வீரபத்திர செட்டியார், கரூர். **33.** காமாக்ஷியம்மாள், கரூர். **34.** வெங்கடேசலு, கரூர். **35.** சீதாராமன், கரூர். **36.** எ. பாஷ்யம், கோயமுத்தூர். **37.** சிவசுப்ரமணியன், பங்களூர். **38.** வெங்கடாசாரி, அல்சூர். **39.** பசவய்யா, எஸ். பங்களூர். **40.** கே. சுலோசனு, பிரஞ்சு ராக்ஸ். **41.** லோகய்ய நாயுடு, சாமராஜநகர். **42.** ஆர். கோவிந்தன், மைசூர். **43.** என். தியாகராஜய்யர், வர்கால்பட்டு. **44.** காவேரி அம்மாள், ஒரத்தநாடு சத்திரம். **45.** தேவராஜ், ஆர். மன்னர்குடி. **46.** எம். தம்புராஜ், ஜபல்பூர். **47.** என். சம்பந்தம், ஜலந்தர். **48.** எஸ். கதிரேசன், காரைக்குடி.



# வெண்பாவூரில் கிராம சுயராஜ்யம்

## அங்கே நடைபெறும் அழகிய திட்டம்

உலகமெங்கும் புரட்சிப் புயல் வீசிக்கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் இந்தியாவின் உயிர் நாடிகளான கிராமங்களில்தான் நாம் செய்யவேண்டிய சேவைகள் அனந்தம் இருக்கின்றன. அதற்கு மிகவும் பொறுமையும் ஊக்கமும் வாய்ந்த ஊழியர்கள் முன்வர வேண்டும். இன்று அநேகமாக நம்முடைய கிராமங்கள் பரம்பரை மரியாதைகள் பிரபுத்வ உரிமைகள் போன்ற சில்லரைச் சச்சரவுகளில் பிளவுபட்டுக் கிடக்கின்றன.

சமீபத்தில் அத்தகைய கிராமம் ஒன்று ஊக்கமிகுந்த ஊழியர் ஒருவரால் ஒற்றுமைப்பட்டிருக்கும் செய்தி கிடைத்துளது. திருச்சி ஜில்லாவில் பெரம்பலூர் தாலூகா வெண்பாவூர் என்பதே அந்தக் கிராமம். சுமார் பதினெட்டு இருபது ஆண்டுகளாகப் பிளவுபட்டுக் கிடந்தது. பொதுப்பணியில் தீவிர ஆர்வமுள்ள நண்பர் திரு. விருத்தாசல ரெட்டியார் அந்த கிராமத்துப் பெரியதனக்காரர். அவர் தேசீயக் கொள்கைகளிலும் கூட்டுறவு முறையிலும் கல்வித் துறையிலும் மிகுந்த ஈடுபாடும் வெளி உலகத் தொடர்பும் உடையவர். அவர் சமீபத்தில் அரியலூரில் நடைபெற்ற கிராமத் தலைவர் பயிற்சி வகுப்பில் அறிமுகப்படுத்தப்பட்ட திட்டத்தை பரீக்ஷார்த்தமாகத் தன் கிராமத்தில் செயல் புரிய ஆரம்பித்து வெற்றியடைந்திருக்கிருர்.

அந்த முயற்சியில் கிராம அபிவிருத்தி சங்கம் ஒன்று அங்கு ஸ்தாபிக்கப்பட்டு, சகல வகுப்பார்களின் பிரதிநிதி ஸ்தாபனமாக அது விளங்குகிறது. கட்டுப்பாடான திட்டங்கள் அதற்குண்டு. அதன் ஆதரவில் சாரணப்படை ஒன்றும் ஏற்பட்டிருக்கிறது. ஆலய மரியாதை முதலிய பாரம்பர்ய பாத்யதைகளை அவரே விட்டுக் கொடுத்து சமத்வ வாழ்வுக்கு அடிகோலியிருக்கிருர். கிராமத்து சம்பந்தமான சகல காரியங்களும் பஞ்சாயத்து போன்ற நிர்வாக ஸ்தாபனங்களும் தார்மீக முறையில் இந்த அபிவிருத்தி சங்கத்தின் கட்டளைகளுக்கு உட்பட்டவை. சுருக்கமாகச் சொன்னல், கிராம ஸ்வராஜ்யம் என்று செல்லலாம். இத்தகைய ஒற்றுமைக் கழகங்கள் நமது கிராமங்களில் பரவி வருமானல் நம்முடைய லக்ஷியம் சீக்கிரம் கிட்டுமென்பதில் தடையில்லை.

### ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

**தேவரது ஜயந்தியும் வித்யாலய விழாவும்**

இந்தியமக்கள் மேலை நாகரீகத்தின் மோகத்தில் சிக்குண்டு தங்களுக்குரிய ஞானமும் சக்தியும் தேய்ந்து அல்லலுற்றிருந்த கொடிய நாட்களில் அவர்கள் உண்மை நிலையை உணரச்செய்யவும் இந்தியாவின் இணையற்ற பண்பாட்டை அகில உலகும் அறியும்படி செய்யவும் விவேகானந்த ஞானக் குழவியை நமக்களித்த ஸ்ரீராம கிருஷ்ண தேவருடைய ஜயந்தி திருப்பராய்த்துறை ஸ்ரீ ராம கிருஷ்ண தபோவனத்தில் சென்ற 5—3—46ல் சிறப்பாக நடைபெற்றது. அன்று வித்யாலயத்தின் இரண்டாவது ஆண்டு விழாவும் அத்துடன் கலந்தது.

அன்று காலையில் பூஜை, தியானம், பஜனை முதலியன அமைதியாக நடைபெற்றபோது ஒரு தெய்வீக வாடை சூழ்ந்திருந்தது. பகல் உணவுக்குப்பின் ஸ்ரீ பராய்த்துறைநாதர் வஸந்தமண்டபத்தில் வித்யாலய மாணவ மாணவிகள் பாட்டு, பரதநாட்டியம், நடிப்பு, உபந்யாசம் அருள்வாக்கு, கீதாஞ்சலி, கோலாட்டம், குஸ்தி, சம்ஸ்கிருதப்பேச்சு முதலியவற்ருல் விழாவைச் சிறப்பித்தனர். ஆசிரியர்களின் முயற்சியும் சிரத்தையும் நல்ல பயனளித்திருக்கிறது.

புது வயல் திரு. ராமனுதஞ் செட்டியாரும் திரு. எப். ஜி. நடேசய்யரும் பாமஹம்ஸதேவருடைய உபதேசங்களைப் பற்றியும் வித்யாலய இயக்கத்தைப்பற்றியும் விளக்கினர்கள். வித்யாலய அதிபர் சுவாமி சித்பவானந்தர் அழகிய, அறிவு தரும் சொற்பெருக்கு நிகழ்த்தினர். "பாரத தேவியின் தர்சனம்" என்ற காக்ஷியில் பாரத தேவியாக நடித்த குழந்தையின் தோற்றம் உயரிய முறையில் இருந்தது. விழாவுக்கு ஜில்லா கல்வி அதிகாரி திரு. அப்பர் சுந்தர முதலியார் வந்திருந்து மகிழ்ந்தார்.

---

### துறையூர் டி. மு. கோர்ட்டு

**O. P. 5/1946**

க. வீ. கரிவண்டஞ்செட்டியார் வகையரு —மனுதார்கள்.

Nil —எதிர்மனுதார்கள்.

இந்த நெம்பரில் 10—8—45ந்தேதி இறந்த திருஞானசம்பந்தஞ் செட்டியாருக்கு Mahalakshmi Textile Mills கம்பெனியிலிருந்து கிடைக்க வேண்டிய ஷேர் தொகைக்கு வார்சு சர்டிபிகேட்டு கிடைக்க மனுதார்களால் மனுப்போட்டு 27—3—46-ந்தேதி கெடுவைத்திருக்கிறது.

R. T. வாதறஜய்யங்கார்,
மனுதார் வக்கீல்.

(11-ம் பக்கத் தொடர்ச்சி)

"பரவாயில்லை" என்று சொல்லி, அவள் கைகளைப்பற்றித் தடவிக்கொடுத்தேன்

"நாகரீகத்தால் உளுத்துப்போன என்னை எதற்காகத் தேர்ந்தெடுத்து மணம் செய்து கொண்டீர்கள்?"

"கமலா, தத்துப்பித்து என்றுஉளருதே உன்னை நேசித்ததில் என்ன தப்பு? என் உள்ளத்தை களவாடிய உன்னை நான்விடமாட்டேன்?"

"சகுந்தலாவுக்கு தெரியுமோ?"

நான் அந்தப் பெயரைக் கேட்டுத்திடுக்கிட்டேன். இதுவரை மங்கியிருந்த ஞாபகம் வெளிவந்தது.

"அவளைப் பார்க்கவேண்டு போலிருக்கிறது"

"அதெற்கென்ன. வரவழைக்கிறேன். இதோ அம்மா வருகிறுள்."

"பாவம் அம்மா என் அவஸ்தைப் படுகிறுர்கள்?"

எவ்வளவுதான் சகுந்தலாமீது அன்பு கொண்டவளாலும் கமலாவின் பரிதாப நிலையும் குழந்தை மனமும் பேச்சும் அம்மாவின் கண்களில் நீரைப் பெருக்கின.

"நீ எப்படியாவது பிழைத்தால்போது மடி குழந்தே அந்த வெங்கடாசலபதிதான் உயிர்ப்பிச்சை கொடுக்கவேண்டும்."

"சகுந்தலா..." என்றுள் என் பக்கம் திரும்பி.

"வரவழைக்கிறேன்"

சகுந்தலா வந்தாள் என் இடத்தைப் பிடித்துக்கொண்டுஇராப்பகலாக நான்கு நாட்கள் உழைத்தாள். என்ன பயன்?

விடியற்காலை கொஞ்சம் கண் அயர்ந்திருப்பேன் "அத்தான்" என்று சகுந்தலாவின் அலறல். கமலா காரியம் முடிந்துவிட்டது.

சகுந்தலா தங்கமான பெண் என்பது கமலாவின் கடைசி வார்த்தைகள்.

எனக்கென்னமோ ஒன்றும் பிடிக்கவில்லை. கிராமத்திற்கு திரும்பிப்போக விரும்பவில்லை. வெறிபிடித்தவன்போல் சில ஊர்களைச் சுற்றிவந்தேன்.

'அம்மாவக்கு உடம்பு அசௌக்கியம்' என்று கடிதம்எழுதியிருந்தாள் சகுந்தலா. பாசம் விடவில்லை. ஊருக்குத் திரும்பினேன்.

சோபை குன்றிய என் முகத்தையும் வாடி உலர்ந்த உடம்பையும்கண்ட தாயுள்ளம் கதறியது. எனது பாழான வாழ்க்கைதான் அவளுடைய அசௌக்கியத்துக்குக் காரணம்.

நான் என் அறைக்குச் சென்றேன். ஜன்னல் பக்கம் நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்தேன். எதிரே அவள் இருந்த வீடு. கண்களை இருக மூடிக் கொண்டேன்.

"அத்தான்"

விழித்துப்பார்த்தேன் அதற்குள் இருட்டிவிட்டதா என்ன? வாசற்படியிலேயே நின்றிருந்தாள் சகுந்தலா.

"இங்குதான் இருக்கிறீர்களா! விளக்குக் கொண்டு வரட்டுமா?"

"வேண்டாம். பைத்தியம் பிடித்துவிடும்போல் இருக்கிறது."

மௌனம்.

"என்னை மன்னித்து விட்டாயா, சகுந்தலா."

"மன்னிக்க என்ன இருக்கிறது, அத்தான்."

"சகுந்தலா!"

"என்?"

"சௌந்தர்யவல்லியான நீ என் அருகில் இருந்தபோது நான் எப்படி மாறினேன் என்று புறியவில்லை என்ன மடத்தனம்."

"அதையெல்லாம் இப்பொது நினைத்துக்கொள்வானேன்"

"சகுந்தலா" என்று பதறிப் போய் அவளை நெருங்கினேன்.

சாந்தமாக அவள் ஒரு அடி பின்வாங்கி "அத்தான் இனி யாருக்கும் இடமில்லை என் நெஞ்சில். என்னை மன்னியுங்கள்" என்று முடித்தாள். பிறகு போய் விட்டாள்.

• தீவிரமும் உணர்ச்சிக் கலப்பற்ற வைராக்கியமும் கலந்த அவள் குரல் அறைபூராவும் அலைமோதி என்னை சித்திரவதை செய்தன.

பொழுது விடியும் சமயம் தூக்கமயக்கத்தில் புரண்டு கொண்டிருந்தேன். வாசலில் மாட்டு வண்டியின் சலங்கைச் சப்தம் கேட்டுக்கொண்டிருந்தது.

"அத்தான்" என்று கூப்பிட்டுக் கொண்டே உள் நுழைந்தாள் சகுந்தலா.

திடுக்கிட்டுத் துள்ளி எழுந்தேன். உடலிலே ஒரு பரபரப்பு.

"ஊருக்குப் போய் வருகிறேன்" என்றுள்.

எனக்குத் தூக்கிவாரிப்போட்டது திடீரென்று அவள் கிளம்பக் காரணம்? ஒருவேளை முந்தின இரவு நடந்த எங்கள் சம்பாஷணையிளுல் இருக்குமா?

"நிஜமாகவா சகுந்தலா திடீரென்று கிளம்புகிறுயே......என்னை..."

"இல்லை அத்தான் வந்து வெகுநாட்கள் ஆகிவிட்டன..."

எனக்கு மூளை கலங்கியது சமாளித்துக்கொள்வதற்குள் அவள் வண்டியில் ஏறிக்கொண்டுவிட்டாள்.

"உடம்பைப்பார்த்துக்கொள்ளுங்கள் அத்தான்" என்றுள் உள்ளிருந்தபடி.

நான் வண்டி போகும் திக்கையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்தேன்.

★

## லால்குடியில்
## சமூக உரிமை வழக்கு

லால்குடி பாப்பாங்குளம் என்று வழங்கும் பொதுக் குளத்தில் இறங்கி நீர் எடுப்பது போன்ற உரிமை சம்பந்தமாக லால்குடி பஞ்சாயத்து போர்டுக்கும் லால்குடி பிராமண மஹாசபாவுக்கும் முசிரி சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் நடைபெற்ற வழக்கில், மேற்படி குளம் பொது ஜனங்களின் பொது உடமையென்றும் அதில் தலையிட பிராம்மணர்களுக்குத் தனி உரிமை எதும் இல்லையென்றும் தீர்ப்பளிக்கப்பட்டது.

மஹாசபாவின் சார்பில் திரு. கே. கே. ராமச்சந்திர அய்யரும் பஞ்சாயத்போர்டு சார்பில் திருச்சி அட்வகேட் திரு. எம். முத்துசாமி அவர்களும் ஆஜரானுர்கள்.




# 15. பரீட்சைக்குப் படிக்கிறார்கள்

★

சகாக்களுக்கு ஹெட்மாஸ்டர் வீட்டுக்குப் போய்ப் படிப்பது ரொம்பத் தொல்லையாகத்தான் இருந்தது. விளையாட நேரமே கிடைப்பதில்லை. வள்ளி இவர்களோடு சேர்ந்து ஸ்டிரைக் செய்யாததால் அவளுக்கு இந்தத் தொந்திரவு இல்லை.

அன்று ஹெட்மாஸ்டர் வீட்டுக்குப் போகும் வழியில் வள்ளியைச் சந்தித்தார்கள்.

“வள்ளி உன் பாடு வேட்டை, குஷாலா இருக்கே இந்தக் காலிப்பய காளியாலே நாங்க மாட்டிக்கிட்டு முளிக்கிறோம் இப்போ” என்று அங்கலாய்த்துக் கொண்டான் முருவன்.

“நீங்க இல்லாத எனக்குந்தான் பொளுதே போவல்லே.... இருந்தாலும் நீங்க இந்த மாதிரி பள்ளிக்கூடத்துக்கு மட்டம் போட்டதுமில்லாமே மலைப்பிஞ்சுப் பிரயோகமும் செய்யக்கூடாது,” என்று வள்ளி தன் அபிப்பிராயத்தை வெளியிட்டாள்.

“ஹூம்....” என்று பெரு மூச்சு விட்டான் மருதை.

“இதுவும் நல்லதுதான். பரீட்சைக்குப் படிச்சாப்பலே ஆவுது. நல்ல மார்க் வாங்கலாம்” என்றாள் வள்ளி.

அளகுக்கு ஆத்திரம் தாங்கவில்லை. “நாசமாப் போச்சு.... பரீட்சையும் பாடமுந்தான் இருக்கவே இருக்கே. அதுக்குப் படிக்காம இருக்கப்போறமா?” என்றான்.

“ஏய்....நாளியாயிடுத்து.... அப்பறம் அவரு எரிஞ்சு விளுவாரு.... வாடா போவலாம்” என்றான் முனியன்.

“இனிமே நான் கூட முன்போல உங்களோட நாள் பூரா வந்து கொட்டமடிக்க முடியாது! இந்தமாதிரி கண்டபடி சுத்தப்படாதுன்னு எங்கம்மா கோவிச்சுக்கராங்க” என்றாள் வள்ளி வருத்தத்துடன்.

நமது கோஷ்டிக்கு இது ரொம்ப வருத்தமாய்த்தான் இருந்தது.

“இந்த பொம்பளைங்க விவகாரமே இப்படித்தான்” என்றான் வருத்தத்துடன் முருவன்.

பிறகு தங்கள் ஸெட்டு இப்படி மோசமாய்ப் போவதைப்பற்றிப் பேசிக்கொண்டே நடந்தார்கள்.

“ஏய்.... நாம்ப ஹெட்மாஸ்டர் வீட்டுக்குப் பேறதை எப்படியாவது நிப்பாட்டிக்கணும்டா!” என்றான் மருதை.

“நானுந்தான் யோசிக்கறேன்.... யோசிக்கறேன் ஒருவளியும் தெரிய மாட்டேங்குதே”

“எப்படியோ ஏதானும் இதுக்கு ஒரு வளி பண்ணித்தான் ஆவனும்டா!”

ஃ ஃ ஃ

மனம் விளையாட்டிலும் கண் புத்தகத்திலுமாகப் பாடங்களைப் படித்துக் கொண்டிருந்தார்கள் கோஷ்டிகள்.

ஹெட்மாஸ்டர் வேறு ஒரு வாத்தியாருடன் பேசிக்கொண்டிருந்தார். ஏதோ மேலதிகாரியிடமிருந்து உத்தரவு வந்திருப்பதாயும் அது மிகவும் அவசரமும் முக்கியமுமானது என்றும் அதை நாளைக்குப் பள்ளிக்கூடத்தில் எல்லோருக்கும் தெரியப்படுத்த வேண்டும் என்றும் சொல்லிக்கொண்டிருந்தது கோஷ்டிகளுக்குக் கேட்டது. ஒரு கத்தை வெள்ளைக் காகிதத்தை அவருக்குக் காட்டியதையும் கடைக்கண்ணால் பார்த்தான் முருவன். சிறிது நேரத்தில் அந்த வாத்தியார் எழுந்து போய்விட்டார். ஹெட்மாஸ்டரும் ஏதோ வேலையாக அந்தப் பேப்பரை வெளியிலேயே வைத்துவிட்டு உள்ளே எழுந்து போனார்.

ஏதோ தீர்மானத்துக்கு வந்த முருவன் ஜன்னலருகில் போய்ச் சீட்டி அடித்தான். வெளியே காத்துக்கொண்டிருந்த ஜிம்மி குதித்துக் கொண்டு ஓடிவந்தது. அதனிடம் ஏதோ சொன்னான். அவ்வளவுதான். அது ஹெட்மாஸ்டர் வைத்திருந்த அதிகாரியின் அறிக்கையைக் கவ்விக்கொண்டு ஓடியே போய்விட்டது.

மற்ற சகாக்களுக்கு இது ஒன்றுமே விளங்கவில்லை.

“ஏ! முருவா என்னடா இது. நீ வேறே பெரிய வம்புலே மாட்டிவைப்பே போலிருக்கே....! அதை யேண்டா ஜிம்மியைத் தூக்கிட்டுப் போவச் சொல்லிட்டே” என்று கவலையோடு கேட்டான் முனியன்.

“பயந்தாங்குளி. பேசாம வாயை மூடிக்கொண்டு இரு. எல்லாம் எனக்குத் தெரியும்” என்று சொல்லிவிட்டு ரொம்ப அக்கரையோடு படிப்பதுபோல பாவனை செய்தான்.

மருதைக்கும் அளகுக்கும் மட்டும் முருவன் ஏதோ தமாஷ் பண்ணப்போகிறான் என்று தெரிந்தது.

சிறிதுநேரங்கழித்து ஹெட்மாஸ்டரின் கூச்சல் கேட்க ஆரம்பித்தது “ஐயையோ! இங்க வைச்ச பேப்பரைக் காணமே....! ஏய் பசங்களா? டேய் .... முருவா மருதை இங்க இருந்த பேப்பரைப் பாத்தீங்களாடா?” என்று ஏக ஆர்ப்பாட்டம் செய்தார்.

“எந்தப் பேப்பர் சார்........ எங்கே வச்சிருந்தீங்க. நாங்க பாக்கலையேஎன்று” பரபரப்போடு பதில் சொன்னான் முருவன்.

“இங்கே தாண்டா வச்சிருந்தேன். கஷ்டகாலமே இப்ப என்ன பண்றது....” என்று பதற ஆரம்பித்தார்.

“நாங்க தேடிப் பாக்கறோம்சார் இதோ ஒரு நிமிஷத்திலே கொண்டு வந்துடறோம் பாருங்கோ” என்று கோஷ்டிகள் கிளம்பிற்று.

சந்தோஷத்துடன் வெளியே வந்த முருவன் “எப்படிடா.... மருதை, கொஞ்ச நாளி கவலை இல்லாம சுத்தலாம்” என்றான்.

“அது சரிடா பழி.... அந்தப் பேப்பர் விஷயம்”—

“அதை நம்ம ரூமிலே கொண்டு போய்ப் போட்டிருக்கும் ஜிம்மி” கவலைப்படாதே.

சிறிது நேரம் வெளியே சுற்றிவிட்டுக் கையில் பேப்பருடன் ரொம்பக் களைத்துப்போனதுபோல வந்தார்கள் கோஷ்டிகள். ஹெட்மாஸ்டருக்குப் போன உயிர் திரும்பி வந்தது.

“எங்கடா இருந்தது” என்று சந்தோஷத்தோடு அதை வாங்கிக் கொண்டார்.

“தோட்டத்துக்கு வெளியிலே காத்திலே பறந்து விளுந்திருந்தது சார். முதலிலே கூட எங்களுக்குத் தெரியல்லே. அப்பறம் அளகுதான் எடுத்தான்” என்றனர்.

ஹெட்மாஸ்டருக்கு அது உண்மையா என்று யோசிக்க நேரமில்லை. பேப்பர் கிடைத்த சந்தோஷத்தில் “குறும்புத்தனம் பண்ணினாலும் நீங்க சாமர்த்தியக்காரங்கடா” என்றார்.

இதுதான் சமயமென்று முருவன் “சார்....சார் நாங்க வீட்டிலேயே ஒழுங்காப் படிக்கிறோம் சார். இனிமே இந்தமாதிரி குறும்பெல்லாம் பண்ணலை என்று கேட்டுக்கொள்ளவே, அவரும்” சரி ஒழுங்கா வீட்டிலே படிக்கணும். பரீட்சை இன்னும் பத்து நாள்தான் இருக்கு. நிறைய மார்க் வாங்கணும்” போங்க என்று அனுப்பி விட்டார்.

கோஷ்டிக்கு சந்தோஷம் தாங்கவில்லை “இனிமே பரீட்சை வரையில் கண்டபடி சுத்தக்கூடாது என்று தீர்மானித்துக்கொண்டனர்.

நாமும் அவர்களைத் தொந்திரவு பண்ணாமல் பரிட்சைக்குப் படிக்க விட்டுவிடுவோம்!

---

## “காக்கா” கணக்கு

உபாத்தியாயர் பையன்களைப் பார்த்து “நாளை இன்ஸ்பெக்டர் வருகிறார், ஆகையால் எல்லோரும் நன்றாகப் படித்துக்கொண்டு வர வேண்டும்” என்று கூறினார் பையன்கள் எல்லோரும் மறுநாள் வந்தார்கள், இன்ஸ்பெக்டரும் வந்து ஒவ்வொரு வகுப்பையும் பார்வையிட்டு வந்தார்.

நான்காம் வகுப்புக்கு வந்து, ஒரு கணக்குப் போட்டு விட்டு பிறகு எல்லாப் பையன்களையும் பார்த்து “நான் போடும் கணக்கை செய்பவனுக்கு நிறைய பிஸ்கட் கொடுப்பேன்” என்றார். பையன்களெல்லாம் கவனமாகக்கணக்கை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். “இந்தவூரில் எத்தனைகாக்காய்கள் இருக்கிறது” என்று கேட்டார். பையன்கள் திகைத்துவிட்டனர். ஒருவருக்கும் தெரியவில்லை. முழித்தனர். அந்த வகுப்பில் சோமுஎன்பவன், “எனக்குத் தெரியும் சார்.” என்று கைதூக்கினான். “எத்தனை” என்று இன்ஸ்பெக்டர் கேட்டார். ‘565’ என்றான்சோமு. ‘எப்படி 570 அல்லவா இருந்தது.’ “அப்படியானால் 5 காக்காய்கள் வெளி ஊரிலிருந்து விருந்துக்கு வந்திருக்கும் சார். 560 இருந்திருந்தால் வெளிஊருக்குப் போயிருக்கும்” என்றான். இன்ஸ்பெக்டர் உடனே சோமுவைத் தட்டிக்கொடுத்து பிஸ்கட் ஐயும் கொடுத்தார். உபாத்தியாயரும், மற்ற பையன்களும் சோமுவின் புத்திசாலித்தனத்தை மெச்சினார்கள்.

—எம். சிவகாமி நாதன்.

# சினிமா பகுதி

✽ ஜெமினியிலே ஏக ஆர்ப்பாட்டங்கள் செய்கிறானும் 'ஜலந்தரன்' ஒரே கோபாவேசமாம் அவனுக்கு என்ன என்கிறீர்களா? அதுதான் ராஜராஜேஸ்வரியாரின் 'துளசி ஜலந்தர்' படப்பிடிப்பு! சின்னப்பாவும் கண்ணாம்பாவும் சக்கை போடு போடுகிறார்களாம். படம் 'ஏ' ஒன்னாக இருக்கப் போகிறது என்று ஜெமினிக் குருவி ஒன்று சொல்கிறது.

✽ இன்னொரு பக்கத்திலே கைலாசத்தைக் கொண்டு வந்துவைத்துவிட்டார்களாம் அதே ஜெமினியிலே. எதற்காகத் தெரியுமா? பம்பாய் நேஷனல் ஸ்டூடியோக்காரர்கள் தயாரிக்கும் தமிழ்ப் படமான 'ருக்மாங்கதா' விற்குத்தான். சங்கீதத்துக்கு ஜி. என். பி., (அனேகருக்குக் குரல் இரவல் கொடுக்கும்) பி. ஏ. பெரியநாயகியும், நாட்டியத்துக்கு மங்களமும், ஹாஸ்யத்திற்கு நாராயணராவும், ராமச்சந்திரனும், இருக்கும்போது படத்தைப்பற்றி அதிகம் சொல்வானேன்.

✽ பைத்தியம்.... படுபைத்தியம் ஐயா! எவ்வளவு 'நாச்சுரலா' ஆக்ட் பண்ணிருக்கார் இந்தச் சின்னப்பா!' என்று 'அர்த்தநாரி' பார்த்து விட்டு வெளியே வந்து கொண்டிருந்த இரண்டு நண்பர்கள் அளந்துகொண்டு வந்தார்கள். சுப்ரமணியம் தமாஷ் பேர்வழியல்லவா? சின்னப்பாவை அர்த்தநாரியில் பைத்தியமாக அடித்தது போதாதென்று 'விகட யோகி'யிலும் முழுப் பைத்தியமாக அடித்திருக்கிறாரும். அதோடு ஹாஸ்ய பாகத்திலும் சின்னப்பாவிற்கு நிறைய வேலை இருக்கிறதாம். ராஜகுமாரிதான் கதாநாயகி.

✽ நியூடோனின் தயாராகும் ஏ. வி. எம். புரொடக்ஷன்ஸின் 'வேதாள உலகத்'திலே டி. ஆர். மகாலிங்கமும், சாரங்கபாணியும் சக்கை போடு போடுகிறார்களாம். அதோடு பேபி கமலா, ஆர். பாலசுப்ரமணியம், தவமணி தேவி முதலியோரும் இருக்கின்றனர்.

✽ சரவணபவா பிக்சர்ஸாரின் 'ஏகம்ப வாணனில்' கொத்தமங்கலம் சீனு, பெரிய நாயகி, மகாதேவன், சாரங்கபாணி, புளிமூட்டை, குளத்துமணி, இப்படி ஒரே நட்சத்திரமயமாக இருக்கிறது. கதையிலும் நல்ல ருசிகரமான அம்சங்கள் இருக்கின்றதாம்.

✽ 'சின்னப்பா'விற்கு ஏகப்பட்ட கிராக்கி 'அர்த்தநாரி'யாயிற்று. ஜெமினியிலே 'துளசி ஜலந்தர்' ராயிற்று. கிருஷ்ணா பிக்சர்ஸாரது 'கிருஷ்ணபக்தி'யிலே ராஜகுமாரி, தனலெக்ஷ்மி, பெரியநாயகி, ராமச்சந்திரன, பாலசுப்ரமணியன்கள், ஆள்வார், புளிமூட்டை இவ்வளவு பேர்களோடு தோன்றப் போகிறார். பிறகு பாக்யா பிக்சர்ஸாரது 'மங்கையர்க்கரசி'யிலே ஜயம்மாவோடு நடிக்கப் போகிறார். அமெரிக்கா சென்ற ஐயங்கார் பாதியோடு விட்டுப் போயிருக்கும் தமிழ்நாடு டாக்கீஸாரின் 'பங்கஜவல்லி' வேறு இருக்கிறது. முருகன் டாக்கீஸாரின் 'ரத்ன குமாரி'ல் பிச்சைக்கார வேஷம் வேறு. இன்னும் எதெதில் நடக்கக் காண்ட்ராக்ட் ஆகி இருக்கிறதோ! அடேயப்பா! நம்மைத் திணர அடித்து விடுவார் போலிருக்கிறதே இந்தச் சின்னப்பா!

✽ தமிழ் நாட்டின் ஹாலிவுட் என்று பெயர்பெறப் போகிறதாம் மதுரை சித்ர கலா மூவிடோன். அங்கு 'குமர குரு' என்ற படத்தை ஏராள பொருள் சிலவில் தயாரிக்கத் திட்டம போட்டிருக்கிறார்களாம்.

✽ ப்ரகதி ஸ்டூடியோக்காரர்கள் இந்த வருஷத்தில் 5 படங்களைத் திரையிடத் திட்டமிட்டிருக்கிறார்களாம். 'ராஜயோகி' 'மாளவிகா' 'பெண்மணி' 'விஜயலக்ஷிமி' 'ராஜராஜசோழன்' என்பவை. அவைகளின் பெயர்களாம். ராஜயோகியில் முன் பாகத்தில் தியாகராஜபாகவதரும் (முன்பே எடுத்தது) பின் பாகத்தில் ஏ ஆர் ராமசாமியுமாக எடுக்கப்போகிறார்களாம்!

✽ கோவை ஸெண்ட்ரலில் 'வால்மீகி'யும், ஸ்ரீ முருகனும் துரிதமாகத் தயாராகிக் கொண்டிருக்கின்றனவாம். இரண்டிலும், ஹொன்னப்பா, ராஜகுமாரி, ஜீவரத்தினம், காளிரத்னம் கோஷ்டிகள் இருக்கிறார்கள்.

✽ சேலம் மாடர்ன் தியேட்டர்ஸில் ஏகப்பட்ட படங்கள் தயாராகிக் கொண்டிருக்கிறதாம். 'சுபத்ரா' வை வெளியே விட்டாயிற்று 'சித்ரா' கிளம்பத் தயார். 'சுலோசனா' வளர்ந்து வருகிறாள். மூன்றிலும் வசந்தாதான்!

✽ பிரிமியர் ஸினிடோனை வாங்கிய ஸ்ரீ ராமுலு நாயுடு அதை பக்ஷிராஜா ஸ்டூடியோவாக மாற்றி அதில் தன் சொந்த டைரக்ஷனில் 'கன்னிகா' என்ற படத்தைத் தயாரிக்கத் திட்டமிட்டிருக்கிறாரும்.

✽ பாஸ்கர் பிக்சர்ஸாரின் 'பொன்னுருவி' என்ற படத்தின் மூலமாக தமிழ்பட 'ஸ்டண்ட் ராணி' கே. டி. ருக்மணி நீண்ட காலத்திற்குப்பின் மறுபடி வெளிவரப் போகிறாரும். படம் சென்னை சோபன சலா ஸ்டூடியோவில் தயாராகிக் கொண்டிருக்கிறதாம்,

✽ சோபன சலாஸ்டூடியோ என்றதும் ஞாபகம் வருகிறது. கிரீன் பிக்சர்ஸார் தங்கள் 'விறலி' என்ற புராண தமிழ் படத்தை இங்கு தயாரிக்க ஏற்பாடு செய்து கொண்டு வருகின்றனர்.

✽ "நரஸு" உதயணனைப் பார்த்த ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் படத்தைப் பற்றி அபிப்பிராயம் சொல்லிக்கொண்டார்களல்லவா? அது அவர்கள் காதிலும் விழுந்து விட்டது போலிருக்கிறது. ஆகையால் மறுபடியும் சில புதுக் காட்சிகளை எடுக்கிறார்களாம். எடுத்து இப்போது ஓடிக்கொண்டிருக்கும் உதயணனுடன் சேர்க்கப் போகிறார்களாம்" என்று ஒரு நண்பர் நேற்று என்னிடம் ரகசியமாகச் சொன்னார். அது எவ்வளவு தூரம் உண்மையோ?

# புனைப்பெயரிலும் மாரீசமா?

## பட்டமும் புனை பெயரும்

### ஒரிஜினல் "கஜமுகன்" எழுதுகிறார்

மற்ற எல்லாத் துறைகளிலும் போல தமிழ்நாட்டில் புனைப்பெயர் பஞ்சமும் தலைவிரித்தாட ஆரம்பித்துவிட்டதுபோல் தெரிகிறது. இரண்டு "ரதி"கள், பல "இளங்கோ"க்கள், இரண்டு "நாடோடி"கள், இரண்டு "ஆத்ரேயர்"கள்— இப்படியெல்லாம் குழப்பங்களைத் தொடர்ந்து இரண்டு "கஜமுகன்"கள் விவகாரம் தோன்றியிருக்கிறது. ஒரிஜினல் கஜமுகன் (சிவாஜியில் பல வருடங்களாகத் தொடர்புடையவர்) மாரீச கஜமுகனுக்கு விடுக்கும் வேண்டுகோள் இங்கே பிரசுரிக்கப்படுகிறது. இனிமேல் ஒரிஜினல், நியூ ஒரிஜினல், அசல் ஒரிஜினல் என்றெல்லாம் பட்டங்களுடன் புனைப்பெயர்கள் வைத்துக்கொண்டாலும் ஆச்சர்யப்படவேண்டியிராது.

எனக்கு ரொம்ப நாளாக ஒரு தைரியம் இருந்து வந்தது. அதாவது "கஜமுகன்" என்ற பெயரை வேறு ஒருவரும் வைத்துக்கொள்ளமாட்டார்கள்; அப் பெயர் எப்படி ஒலித்தாலும் நமக்கே உரியதாக இருக்கட்டும் என்று நினைந்து வந்தேன். ஆனால் என் தைரியத்தில் ஒரு நண்பர் மண்ணை வாரிப் போட்டிருக்கிறார். "நீ மாத்திரம் எப்படி முழுமுதற் கடவுளான விநாயகர் பெயரை வைத்துக்கொள்ளலாம், விநாயகர் உனக்குமட்டும்தானா தெய்வம்; நீ ஒருவன்தானா பிள்ளையார் பக்தன்; நானும் இதோ ஒருவன் இருக்கிறேன் "கஜமுகன்!" என்று சொல்வதுபோல் ஒரு புதுயானை முகத்தார் கிளம்பியிருக்கிறார்!

அவர் "கஜமுகன்" என்ற பெயரை வைத்துக்கொள்வதில் எனக்கொரு ஆட்சேபனையுமில்லை. ஆனால் இருவருக்கும் அதில் நலன் இல்லை என்பதைமட்டும் தெரிவித்துக்கொள்கிறேன். நல்லது எழுதினாலும் சரி, கெட்டது எழுதினாலும் சரி அது இருவரையும் பாதிக்கும். கியாதி வந்தாலும் சரி, அபக்கியாதி வந்தாலும் சரி இருவரையுமே சாரும்.

சமீபத்தில் நாதஸ்வர சங்கீதத்தைப் பற்றி நமது புதிய கஜமுகன் ஏதோ இழிவு படுத்தும் முறையில் எழுதியிருந்தாராம். அது எந்த பத்திரிகையில் என்று தெரியவில்லை. அக்கட்டுரையை இசை ஜோதி ராஜரத்னம் பிள்ளை படித்துவிட்டு டிஸம்பர் 15ந் தேதி பிரசண்டவிகடன் இதழில் "கஜமுகன்" தலையைப்போட்டு உருட்டியிருக்கிறார்.

அதைப்பார்த்த எனது சென்னை நண்பர்கள் "என்ன கஜமுகன், நீகூட ஏன் இப்படி சச்சரவுகளில் இறங்கிவிட்டாய்?" என்று கேட்டார்கள்.

எனக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை.

"இது ஏதுடா கஷ்டகாலமாய் இருக்கிறது! நானாவது சச்சரவு செய்யவாவது? பிரிட்டிஷ் அரசாங்கத்தைப்பற்றி எழுதும்போதுகூட காரசாரமில்லாமல் தானே எழுதுவது வழக்கம்" என்று நினைத்துக்கொண்டேன்.

"நீங்கள் சொல்லுவது எனக்குப் புரியவில்லையே!" என்றேன் நண்பர்களிடம்.

"இதோ பார்!" என்று பிரசண்டவிகடன் இதழை எடுத்துக் காண்பித்தார்கள்.

பிறகுதான் தெரிந்தது, இன்னொரு கஜமுகன் உதயமாகியிருக்கும் சமாச்சாரம். இசைஜோதி அந்த கஜமுகனை வெளுத்துக் கட்டியிருந்தார். அசட்டு ஆத்திரத்துடன் அதைப் படித்துவிட்டு மௌனமாக இருந்தேன்.

நானும் சென்ற நான்கு வருஷங்களாக இதே பெயரை வைத்துக்கொண்டு பற்பல கதைகள், கட்டுரைகள், பல வேறு பத்திரிகைகளில் எழுதி வந்துள்ளேன். திடீரென்று இப்பொழுது நான் வேறு பெயருடன் எழுத ஆரம்பிப்பது சாத்யமில்லை. அப்படிச் செய்தால் "அடியைப் பிடிடா பாரதப்பட்டா" என்று நான் புதிய எழுத்தாளனாகத் தோன்றவேண்டும்.

நண்பர் புதிய கஜமுகன் தமது பெயரை மாற்றிக்கொள்வார் என்று நம்புகிறேன். ஒரு வயதுக் குழந்தைக்கு காது குத்துவது எவ்வளவு சுலபமோ அவ்வளவு சுலபம் ஆரம்பத்தில் பெயரை மாற்றிக்கொள்வது! புதிய கஜமுகன் அதைச் செய்வார் என்று எதிர்பார்க்கிறேன். "அதெல்லாம் முடியாது, நீதான் பெயரை மாற்றிக்கொள்ளேன்" என்று மல்லுக்கு நிற்பதாக இருந்தால் நான் ஒன்றும் கூறத் தயாராயில்லை. ஒரே இரு பெயர்களினால் ஏற்படும் பலாபலன்களை அனுபவிப்போம். எழுத்தாளர்களிடையே சுமுகமான சூழ்நிலை ஏற்படவேண்டுமென்று சகலருடைய விருப்பமும் ஆகும். அவ்விருப்பத்தைப் பூர்த்திசெய்வதற்கு இந்த ஒரே இரு புனைப்பெயர் பிரச்னை தீர்ந்தாகவேண்டுவது அவசியம்.



# கேப்டன் லக்ஷ்மி கூறுகிறார்:

★



ஜான்ஸி ராணி ரெஜிமெண்ட் எவ்வாறு உருவாயிற்று என்பதுபற்றியும், அந்த ரெஜிமெண்டின் கமாண்டண்ட் என்ற நிலையில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைப் பற்றியும், சிறிதுகாலத்துக்குப் பின் காலா என்னும் இடத்தில் ஆரோக்கிய பரிபாலன நிலையம் ஒன்றை எவ்வாறு நடத்தினார்கள் என்பது பற்றியும், காப்டன் லட்சுமி பத்திரிகை நிருபர்களிடம் தாம் ஒரு ராணுவத்தைச் சார்ந்தவர் என்ற நிலையில் தெளிவாக எடுத்துரைத்தார். இவர் இப்போது இந்தியாவுக்கு வந்துவிட்டார்.

நேதாஜி படையோடு பெண்களுக்கென தனி ஒரு ராணுவஸ்தாபனம் வேண்டும் என்று திரு சுபாஷ் சந்திரபோஸ்தான் முதன்முதல் எண்ணினதாக காப்டன் லட்சுமி கூறினார். பெண்களும் ஆண்களைப்போல் ஆயுதம் தாங்கி போர் செய்ய முடியும் என்பதை உலகத்தாருக்கு எடுத்துக் காட்டுவதற்காகவும், சந்தர்ப்பம் வரும்போது போரிடுவதற்காகப் பெண்களைத் தயார் செய்து வைப்பதற்காகவும் பெண்களுக்கு ராணுவ பயிற்சி கொடுக்கவேண்டும் என்று முதலிலேயே கருதப்பட்டது. ஜான்ஸி ராணி படையில் சேர வேண்டும் என்று எந்தப் பெண்ணும் வற்புறுத்தப்படவில்லை. அவர்கள் தம் இஷ்டப்படிதான் ஜான்ஸி ராணி படையின் பல பகுதிகளிலும் சேர்ந்தனர்.

நேரடியாகப் போரிடுவதற்குரிய பகுதில் சேர்ந்த பெண்களுக்கு முதலில் மூன்று மாதம் ஆயுதப் பயிற்சி கொடுக்கப்பட்டது. அவர்கள் எப்போதும் ராணுவத்திற்குரிய கட்டுப்பாடுகளுக்கு அடங்கி நடக்க வேண்டியதாய் இருந்தது. அவர்கள் ராணுவ முகாம்களில்தான் தங்கியிருக்க வேண்டும். புடவை உடுத்துவதற்குப் பதிலாக சிறிய கால் சட்டைகளும் 'ஷர்ட்டு'களும் அணிய வேண்டியதாய் இருந்தது. ராணுவ முகாமில் வசித்ததினால் அவர்களுக்கு இடையே ஒற்றுமைமனப்பான்மை ஏற்பட்டது. ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் எல்லோரும் ஒன்றாக உழைத்தனர்.

உணவு நெருக்கடியைப் பற்றியோ அல்லது ஜாதி வித்தியாசத்தைப் பற்றியோ அவர்களிடையே கேள்வியே எழுந்ததில்லை; இவைகளைப் பற்றி யாரும் கேட்டதும் இல்லை. இவர்களில் பலர் இந்தியாவைப்பார்த்ததுகூட கிடையாது என்றாலும் இந்தியாவை சுதந்திர நாடாகக் காண வேண்டுமென்ற எண்ணமும் உணர்ச்சியும் எல்லோர் மனதிலும் இருந்தது. இந்தியாவைப் பற்றி ஒன்றுமே தெரியாமலிருந்தும் ஜான்ஸி ராணிபடையில் சேர்ந்தவர்கள் தொகை ஆயிரம் இருக்கும். அவர்களில் பெரும்பாலோரின் பூர்வீகம் தென்னிந்தியா.

ஜான்ஸி ராணி படையைசார்ந்த பெண்களுக்கு ஆயுதப்பயிற்சி கொடுக்கப்பட்டிருந்தபோதிலும் அவர்கள் யுத்த களத்திற்குச் சென்று போர் செய்யவில்லை. ஆனால் அவர்கள் மேமியோ வரையிலும் வந்திருக்கின்றார்கள்.

டாங்கு என்னும் இடத்திலிருந்து சுமார் 100 மைலுக்கு அப்பால் ஓரிடத்தில் காயமடைந்த நேதாஜி படைவீரன் ஒருவனுக்கு சிகிச்சை செய்து கொண்டிருக்கையில், அதாவது 1945 ஜூன் 4உ; பிரிட்டிஷ் கொரில்லா படையினரிடம் சரணடைந்தபின் பிரிட்டிஷார் தம்மை நடத்திய விதத்தைப்பற்றி காப்டன் லட்சுமி கூறினார். சரணடைந்தபின் பிரிட்டிஷார் தம்மை நடத்தியவிதத்தைப்பற்றி காப்டன் லட்சுமிக்கு எவ்வித புகாரும் கிடையாது.

பர்மாவில் ஜெனரல் ஆங்ஸன் தலைமையில் நடைபெறும் பாஸிஸ்ட் எதிர்ப்பு லீகைப்பற்றி தமக்குத் தெரிநத சில தகவல்களை காப்டன் லட்சுமி பத்திரிகை நிருபர்களிடம் கூறினார். ஜெனரல் ஆங்ஸன் யாராலும் கெடுக்கமுடியாத சிறந்ததலைவர் என்பது காப்டன் லட்சுமியின் அபிப்பிராயம். பர்மியரோடு இந்தியர்கள் எப்போதும் சிநேக மனப் பான்மையுடனிருக்க வேண்டும். ஆனால் பர்மியர்களைச் சுரண்டலாம் என்று இந்தியர்கள் எண்ணக்கூடாது என்பது பர்மியர்களின் கருத்து என்றும் காப்டன் லட்சுமி கூறினார்.

★

---

### அரியலூர் டி. மு. கோர்ட்டு

**O. P. No. 10 of 46**

பட்டம்மாள் —மனுதார்

வைத்தினாதக்குருக்கள் —எதிர்மனுதார்

மனுதார் தன்னுடைய புருஷன் இறந்த பெரியசாமிக் குருக்களுக்குஅகஸ்தீஸ்வரக் குருக்களால் 29-10-1942உ யுள்ள புரோநோட்டுபடி ரூ.353-10-8ம் வசூலிக்கத் தனக்கு வார்சு சர்டிபிகேட் கிடைக்கவேணுமாய் அரியலூர் டி. மு. கோர்ட்டில் மனுக்கொடுத்து 21-3-46 உயில் ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையுள்ளவர்கள் அரியலூர்டி.மு. கோர்ட்டில் ஈரங்கி தேதியில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

M. S. Muthuswami Aiyer,
Pleader for Petitioner.

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

## 'நெருப்பிலே போடு!'

★

அ-ஐ— தம்பி சொல்றது நியாயமான பேச்சு!

மூத்தாகவுண்டர்—இது கிடக்குதுங்க, நடக்கவேண்டியதெ பேசுங்க.

சு-ரெ— சரி, அம்மனுக்கு எப்பொ சிறப்புவைக்கலாம்?

அ-ஐ— ஞாயிற்றுக்கிழமை நல்ல நாள், அன்றைக்கு செய்யலாம்.

குமா— ஐயாகிட்டெ ஒண்ணு சொல்லணும்னு நினைக்கிறேன்.

அ-ஐ— சொல்லு, தாராளமா சொல்லு!

குமா— சிறப்புவைக்கிறதுன்ன பொங்கல் வைத்துப் பூசை பண்றதோடு நிறுத்திக்கணும்; பலி கிலி ஒண்ணும் கூடாது! [கூட்டம் ஒரு குலுங்கு குலுங்கிவிட்டது! அண்ணாவி ஐயரும் திகைத்துப்போய் விட்டார்!]

அ-ஐ— அவசரப்படாதே, பெரியவங்க எல்லாம் இருக்கிறாங்க.

குமா— யார் இருந்தா என்ன? பலிகொடுக்கிறதின்ன சிறப்பே கூடாது!

மூத்-க— நீ மட்டும் சொன்னா நின்னுடுமா? ஊராரெல்லாம் சொல்றபடிதானே நடக்கணும்!

குமா— அப்பன்னா, இதிலே நம்ம வீடு கலந்துக்கப்படாது!

நல்-நா— இதென்ன பல்லுக்கு மிஞ்சின உதடா இருக்குதே!

கோ-ஐ— பல்லில்லெ ஓய் உதடு!

அ-ஐ— "பிள்ளைதான் வயதில் மூத்தால பிதாவின் சொல் புத்தி கேளான்— கள்ளி நற்குழலாள் மூத்தால் கணவனைக் கருதிப்பாராள்" என்று சாஸ்திரமே சொல்லியிருக்கே!

வீரப்பபிள்ளைக்கும் பலியென்றால் பிடிக்காது. எப்படியாவது கூட்டத்தைக் கலைத்துவிட நினைத்தார்!

வீ-பி— என்ன சொன்னிங்க, ரெண்டாவது வாக்கியத்தைக் கவனிக்கலே?

அ-ஐ— "கள்ளினல் குழலாள் மூத்தால் கணவனைக் கருதிப்பாராள்" பெண்சாதி வயசு ஆக ஆக புருஷனை லக்ஷியம் பண்ணமாட்டாள் என்று அர்த்தம்.

வீ-பி— "கள்ளி" இன்னா என்னுங்க, புரியலே?

அ-ஐ— திருடி, மோசக்காரி யென்று அர்த்தம்!

"என்ன சொன்னே? இன்னொருக சொல்லு" என்று ஒரு குரல் சாவடியின் கோடியிலிருந்து கர்ஜித்தது! ஆமாம், மூத்தா கவுண்டரின் மனைவி பச்சையம்மைதான்! அண்ணாவி நடுங்கிவிட்டார்! எனினும் ஒருவாறு சமாளித்துக்கொண்டும், "நான் ஒண்ணும் சொல்லலே அம்மா, சாஸ்திரத்திலே அப்படி இருக்குதுன்னு சொன்னேன்" என்று இரங்கிய குரலில் கூறினார். அம்மையார் கோபம் தணியவில்லை. "சாஸ்திரமா? அதெக்கொண்டு போயி நெருப்பிலே போடு" என்று மீண்டும் கர்ஜித்தார்! அவ்வளவுதான், தூங்கி விழுந்துகொண்டிருந்த சிறு பிள்ளைகள் அத்தனை பேரும் "நெருப்பிலே போடு! நெருப்பிலே போடு!" என்று கூச்சல் போட ஆரம்பித்துவிட்டனர். நான் மெதுவாக நழுவிவிட்டேன்!



ஓரத்தில் தோத்திச் செல்லமுடியாத புது மாதிரியான பஸ்



யமுனைக் கரையில் தொழிலாளர்களுடன் [illegible]



வடக்கு ஜெர்மனியில் நிலக்கரி சுரங்கங்கள்



சர். ஏ. கன்னிங்ஹாம்



இளவரசி எலிஸபெத்




**பிரவேசக்கட்டணம் :—கூப்பன் 1க்கு 8 அணு 2 கூப்பன் ரூ. 1. ஒவ்வொரு 3 கூப்பன்சேர்ந்த செட் 1க்கு ரூ. 1/4**

ஒரு கூப்பன்மட்டும் அனுப்புவோர் ஒன்றைமட்டும் பூர்த்திசெய்து மற்ற இரண்டையும் காலியாக அனுப்பவேண்டும். 30—3—46க்குள் நமக்குக் கிடைக்கும்படி கூப்பன்களை அனுப்பவேண்டும்.

1. அடித்தல் திருத்தலின்றி மையினல் பூர்த்திசெய்யவும். ஒரு கட்டத்தில் ஒரு எண் மட்டுமே உண்டு. எந்தக்கட்டமாவது பூர்த்திசெய்யப்படாமலிருந்தால் கணக்கில் சேராது.
2. தி திருச்சினுப்பள்ளி திருசிதி பாங்கில் சீல்செய்துகொடுக்கப்பட்டிருக்கும் ஆசிரியரின் விடைக்கு எண்ணுக்கு எண் சரியான விடைக்கு முதல் பரிசு. ஒன்றுக்கு மேற்பட்ட சரியான விடைகள் வந்தால் பரிசு பகிர்ந்தளிக்கப்படும் ஒருவர் ஒரு பரிசமட்டுமே பெறத் தகுதியுண்டு.
3. கட்டணங்களை மணியார்டரிலோ பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டராகவோ அனுப்பி, அதற்கு அத்தாட்சியாக ரசீதுகளை கூப்பனுடன் அனுப்ப வேண்டும். தவறினல் கூப்பன்கள் தள்ளுபடி செய்யப்படும்.
4. தவறியோ, கிழிந்தோ போனலும், தாமதித்து வந்தாலும் கூப்பன்களுக்கு நாங்கள் ஜவாப்தாரிபல்ல.
5. கட்டணங்களை எக்காரணத்தாலும் வாபஸ்செய்யவோ வேறு கணக்கில் வரவு வைக்கவோ முடியாது. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

# மாணவர்களுக்கு ஸ்பெஷல் போனஸ்

இந்தப் போட்டியில் கலந்துகொண்டு பரிசுகள் பெறும் மாணவி மாணவர்களுக்கு பரிசுத்தொகையுடன் ஸ்பெஷல் போனஸ் பரிசுகள் வழங்க முடிவுசெய்துள்ளோம்.

**முதற் பரிசு பெற்றவர்களுக்கு போனஸ்**

பன்னிரெண்டு மாதங்களுக்கு மாதம் 1-க்கு ரூ. 10 வீதம் ரொக்கப்பரிசு.

**இரண்டாம் பரிசு பெற்றவர்களுக்கு போனஸ்**

மாதம் 1-க்கு ரூ. 5 வீதம் பன்னிரெண்டு மாதங்களுக்கு ரொக்கப்பரிசு.

இந்தப் போட்டியில் கலந்துகொள்ளும் மாணவி மாணவர்கள் போனஸ் கூப்பனையும் போட்டிக் கூப்பனுடன் சேர்த்து அனுப்பவேண்டும். போனஸ் கூப்பன் இல்லாமல் வரும் கூப்பன்கள் தள்ளுபடிசெய்யப்படும்.

**லக்ஷ்மி குறுக்கு-எண் போட்டி 5 போனஸ் கூப்பன்.**

மாணவர் பெயர் ______________________

வகுப்பும் பள்ளிக்கூட விலாசமும் ______________________

உபாத்தியாயர் கையொப்பம் ______________________

# லக்ஷ்மி குறுக்கு எண் போட்டி 5

நெ. 5, அலக்ஸாண்ட்ரா ரோட், கன்டோன்மெண்ட், திருச்சி.

**முடிவு தேதி 30—3—46**

**இடமிருந்து வலம்**

1. பத்து
3. பதினெட்டு
5. பத்து
6. பதினைந்து
7. பதினொன்று
8. பதினொன்று
10. மூன்று
12. பதினேழு
14. பதினேழு
15. பதினேழு
16. பதினான்கு
17. பதினாறு
19. ஏழு
20. பத்து

**மேலிருந்து கீழ்**

1. இருபத்திநான்கு
2. பத்து
3. பதினாறு
4. இருபது
5. பத்து
7. பதினொன்று
9. பதினொன்று
10. பதினைந்து
11. ஏழு
12. இருபத்திஐந்து
13. ஐந்து
14. இருபது
15. பதினைந்து
18. எட்டு

1 முதல் 9 எண்கள் உபயோகிக்கவும். இதன் கீழே கத்தரிக்கவும்




COMPETITION No. 5




COMPETITION No. 5




COMPETITION No. 5

போட்டி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானதும் சட்டப்படி கட்டுப்படுத்துவதும் ஆகும் என்றுஒப்புக்கொள்கிறேன்.

பெயர் ______________________

விலாசம் ______________________

கூப்பன்கள் ............

மணியார்டர், அல்லது போஸ்டல்ஆர்டர் ரசீதுகள் நெ...............

சரியான விடை 14—4—46 சிவாஜியில் வெளியாகும்

Printed at the Trichinopoly United Printers Ltd., Trichinopoly and Published by T. S[illegible] (Editor).